உ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தூது.



வில்லிபுத்தூராழ்வார்

அருளிச்செய்த மூலமும்

காஞ்சிபுரம்

குமாரசுவாமிதேசிகரால் செய்த

பொழிப்புரையும்.



இஃது.

பிரதமம்-திருத்தணிகைச்

**சரவணப்பெருமாளைய**

ரவர்களால்

அச்சிட்டபிரதிக்கிணங்கப்

பரிசோதித்து




வீரணந்தோட்டம்

**கோவிந்தநாயகரால்**

சித்தூர்

**வீராசாமிநாயகரவர்களது**

வித்யாவிநோத அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



பவ௵ ஆனி௴



    

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமி தூது.

## மூலமும் - உரையும்.

---

காப்பு.

### விநாயகர் துதி.

நீடாழியுலகத்துமறை நாலொடைந்தென்றுநிலைநிற்கவே ...*
வாடாத்தவவாய்மைமுனிராஜன் மாபாரதஞ்சொன்னநாள் ...*
ஏடாகவடமேருவெற்பாக வெங்கூரெழுத்தாணிதன் ........*
கோடாகவெழுதும்பிரானைப் பணிந்தன்புகூர்வாமரோ. ......*

[எ-து] நெடிய கடல்சூழ்ந்த பூலோகத்திலே வேதங்களானவை ஐந்தாம்வேதமென்னப் பிரசித்தமாக நிலைநிற்கக் குறையாத மெய்த்தவத்தையுடைய வேதவியாசமகாமுனி மஹாபாரதஞ் சொன்னநாளில் மஹாமேருமலையைக் கையேடாகப் பிடித்துத் தனதுகொம்பை வெள்ளிய கூரையுடைய எழுத்தாணியாகக்கொண்டு அந்தபாரதக்கதையை யெழுதிய விநாயகக்கடவுளைப் பணிந்து பக்திசெய்வாம் என்றவாறு. (க)

### சரஸ்வதி துதி.

பொருப்பிலேபிறந்துதென்னன் புகழிலேகிடந்துசங்கத்... ..*
திருப்பிலேயிருந்துவையை யாற்றிலேதவழ்ந்தபேதை... ...*
நெருப்பிலேநின்றுகற்றோர் நினைவிலேநடந்தோரேன........*
மருப்பிலேபயின்றபாவை மருங்கிலேவளருகின்றாள் ........*

[எ-து] பொதியமாமலையிலே ஜன்மித்து பாண்டியன் கீர்த்தியென்னும் பசும்பொற்றொட்டிலிலே கிடந்து சங்கப்பலகையிலேயிருந்து வையை யாற்றிலே திருஞானசம்பந்தர் விட்ட ஏட்டினிடமாக எதிரேறித் தவழ்ந்த பேதையாகிய சரஸ்வதி பின்புநெருப்பிலேபோட்ட பச்சோலையாய் வே

காமல் நின்று கற்றபேர் நினைவிலேநடந்து ஆதிவராக முகக்கொம்பிலே
மருவிய பூமிதேவி மருங்கிலே கிடக்குங் குழமணப்பிள்ளையாக வளர்
கின்றாள் அக்கலைமகள் என்னாவிலே நிற்கும்படிக்கு நமஸ்கரிக்கிறேனெ
ன்றவாறு. (உ)

பாடற்றொகை.

தருமமெய்த்தருமனைவத் தாளிணைசிவப்பமாயோன்.........*
அரவுயர்கொடியோன்பக்க லழகுறுநாடுவேண்டித்............*
துரகதவிரதமேறித் தூதுபோய்மீண்ட பாடல்... ... .........*
இரவியங்கதிர்போல்வீசு மிருசதத்தறுபத்தொன்றே.........*

[எ-து] தருமமே யுருவாயிருக்கின்ற தருமராஜன் தனக்காகத் துரியோ
தனனருகே தூதுபோகும்படி யேவினதினாலே ஆதிபராபர வஸ்துவாகிய
ஸ்ரீமந்நாராயணமூர்த்தி நாலுவேதங்களினாலுங் காணப்படாத பாதாரவிந்
தஞ்சிவக்கக் குதிரைகட்டிய அலங்கிருதமான இரதத்தில் எழுந்தருளி அ
ஸ்தினாபுரியென்னும் பட்டணத்திற்குப்போய்ச் சர்ப்பக்கொடியோனாகிய
துரியோதனனை அழகுபொருந்திய நாடுகேட்டு அவனுடனே யுத்தப்பிரச
ங்கம்பேசி மீண்டதைக்குறித்தபாடல் சூரியகிரணம்போலப் பிரகாசிக்கி
ன்ற இருநூற்றறுபத்தொன்றும்-எ-று. (௩)

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி துதி.

பேர்படைத்தவிஜயனுடன் மும்மைநெடும்பிறவியினும் பிரியானாகிச்
சீர்படைத்தகேண்மையினாற் றேரூர்தற் கிசைந்தருளுஞ் செங்கண்மாலைப்
பார்படைத்தசுயோதனர்க்குப் படையெடே னமரிலெனப் பணித்தகோ
வைக், கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார் பிறவாழிக் கரைகண்
டாரே.................................................................*

[எ-து] பூலோகமெங்குஞ் சவுரியத்தினாலே பேர்படைத்த அர்ச்சுனனு
டனே இரணியவதை நிமித்தமாக எழுந்தருளினபோது பிரகலாதனா
கியும் இராவணவதை நிமித்தமாக எழுந்தருளினபோது விபீஷணனாகி
யும் பூமிபாரந்தீர்ப்பது காரணமாக எழுந்தருளினபோது அர்ச்சுனனாகி
யும் இப்படி மூன்றவதாரத்திலும் பிரியாதவனாகியும் சீர்படைத்த நட்பி
னாலே அந்த அர்ச்சுனனுக்கு ரதசாரதியாக இசைந்தருளிய செந்தாமரை
க்கண்களையுடைய திருமாலை பூமியையாளுகின்ற துரியோதனன் வந்து
வேண்டினபோது அந்தப்பாரத யுத்தமுகத்திலே நான் ஆயுதங்கையிலெ
டுப்பதில்லையென்று உறுதிசொன்ன தேவராஜனை மேகவண்ணனை ஸ்ரீகி
ருஷ்ணசுவாமியைக் கைதொழுதவர்கள் பிறப்பென்னுங் கடலைநீந்தி முத்
தியாகிய கரையைக்கண்டவர்களென்றவாறு. (௪)

நூல்.

ஞானமன்போடினிதுரைத்த ஞானிமுனியகன்றதற்பின்சாமபேத... ...*
தானதண்டமெனுநிருபர் கருமமுறையிற்புகலுந்தகுதிநோக்கித்.........*

தூநறுந்தண்டுளவோனைத் தூதுவிடுவதற்கெண்ணிச்சுனைகடோறும் ...*
ஏனலந்தண்கிரிப்பெருந்தேனிறைக்குமெழிற்குருநாடனியம்பினனே.*

[எ-து] தருமபுத்திர மகாராசன் வனவாசம் பன்னிரண்டு வருஷமும், அக்கியாதவாசம் ஒருவருஷமும் ஆகப்பதின்மூன்று வருஷமுங் கொலைத்து உபலாவியமென்னும் பட்டணமேவிருந்து துரியோதனன் பக்கல் உலூகமகாமுனியான தன்னுடைய புரோகிதனையனுப்பித் துரியோதனன் தன்னுடைய தகப்பனான திருதராட்டிரனுடனே உசாவிக்கொண்டு சஞ்சயமகாமுனியான தன்னுடைய புரோகிதனை அழைத்து நீர்போய் ஞானப்பிரசங்கம்பண்ணித் தருமபுத்திராதியரை இன்னம் வனவாசம் போவதற்குத் தக்கதாகச் சொல்லிவாருமென்ன அந்தப்படியே புரோகிதன் ஆசீர்வதித்து, ஞானப்பிரசங்கம்பண்ணி நீங்கள் இன்னந் தபசுபண்ணுவதே உறுதியென்றுசொல்ல இதைமறுத்து சத்துருசங்காரஞ்செய்து பாரதக்கிலை முடிப்பேனென்று வீமசேனன்சொல்லியனுப்ப அந்தப்படியே சஞ்சயமகாமுனிபோனபின்பு சாமபேததான தண்டமென்னும் இராஜநீதி முறைமை வழுவாமல் சொல்லத்தக்கவனென்றறிந்து பரிமளம்பொருந்திய பரிசுத்தமாகிய துளபமாலையணிந்த ஸ்ரீகிருஷ்ணதேவனைத் தூது விடுவதற்கு எண்ணிச் சுனைகள்தோறுஞ் செந்தினையையுடைய திண்ணிய மலைகள்மிகுந்த தேனிறைக்கின்ற குருநாட்டுக்கதிபதியான தருமபுத்திரமகாராஜன் சொல்லத்தொடங்கினன்-எ-று. (க)

செஞ்சொன்முனிசஞ்சயனுக்கியாமுரைத்தகருமமுமுன்சென்றகாலை...*
அஞ்சொன்முனிபுரோகிதனுக்கவனிசைத்தகருமமு நீயறிந்ததன்றே ...*
நஞ்சுதனைமிகவருந்திநன்மருந்துமந்திரமும்வினைந்துபாடாத்... ... ...*
துஞ்சினர்தங்களைப்போலவிருக்குமமோயாயார்மனத்துமிருக்குஞ்சோதி.*

[எ-து] செவ்வையான சொற்போலேசொன்ன சஞ்சயமகாமுனிக்குநாம்சொன்னவசனமும் நாமனுப்புமுன்போகியஉலூகமகாமுனியானபுரோகிதனுடனே துரியோதனனப்போது பேசினவசனமும் தேவரீருடைய திருவுளமேயறியுமல்லவோ விஷத்தைக்குடித்து அதுதீர நல்லமருந்தும மந்திரமுங்கடுகவிசாரியாமல் விஷமேசிகனைவிட்டவர்களைப்போல நாங்கள்போகாதபடிக்கு ஒருபுத்தி யெங்களுக்குப் போதிக்கவேண்டும் சர்வலோகத்தார் மனதிலுமிருந்து விளையாடுகின்ற சோதிசொரூபனேயென்று பின்னுஞ்சொல்லுகிறான்-எ-று. (உ)

அருஞ்சமரம்புரியுமவகையவர்துணிந்தாராமாகிலதுநன்றியாமும்... .. *
பெருஞ்சமரம்விளைக்குமதுகடனன்றென்றருள்வெள்ளம் பெருகக்கூறும்
பொருஞ்சமரநெடுமுரசப்பூங்கொடியோன்றனைநோக்கிப் புயல்போல் வா
ணை,னிருஞ்சமரந்தொலைத்தபிரானிளைஞரையுமுடனிருத்தியியம்பினனே

[எ-து] குருக்ஷேத்திரபூமியிலே அரிய யுத்தஞ்செய்யத்தக்கதாகத் துரியோதனாதியர் சம்மதித்ததேயுண்டாகில் அதுநல்லது-நாம் முந்தி யுத்தஞ்செய்யச் சம்மதித்துச்சொல்லுகிறது முறைமையல்லவென்று கிருபா

வெள்ளம்பெருகும்படி சொல்லிய பொருகின்றநெடிய மூரகக்கொடிபடைத்த தருமபுத்திரமகாராஜனைப்பார்த்து மேகம்போன்ற ஆயிரம் புஜகிரிபடைத்த வாணாசுரனைச்செயித்த ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் வீமசேனன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவனென்றுசொல்லப்பட்ட இளைஞரையுங்கூட வைத்துக்கொண்டு இவ்வாறுசொல்லினர்-எ-று. (கூ)

செய்வராலினமுகளுந்திருநாடுபெறநினைவோசென்றுமீளப்...... ......✻
பைவராயருங்கானிற்பயின்றுதிரிதரநினைவோபகைத்தபோரில்...... ...✻
உய்வராமெனவிரவினுருத்தெழுந்துபொரநினைவோவுண்மையாக ...... ✻
ஐவராமவரிபர்க்குநினைவேதன்றருள்புரிந்தானமரர்கோமான்...... ......✻

[எ-து] வயலெங்கும் வராலினங்கள் குதித்துவிளையாடுகின்ற சிறந்த குருநாடுவாங்கிக்கொண்டு அரசாட்சிசெய்யநினைவோ இன்னம்பழையபடியே துன்பமுடையவராய் வனத்திலிருந்து திரியநினைவோ அல்லது பகைத்துசெய்கின்ற யுத்தத்தில் பிழைப்பார் யாரென்றுசொல்லத்துரியோதனாதியரைப் பிரதிக்கினைப்படியே கோபித்துப் பொருதுசெயிக்க நினைவோ ஐவராகிய உங்களொவ்வொருவருக்கு மிருக்கின்ற உண்மையான எண்ணமென்னவென்று திருவுளம்பற்றினர் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (சு)

வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டிவளர்க்கிலுயர்வரைக்காடென்னச் ✻
செயிரமரில்வெகுளிபொரச்சேரவிருதிறத்தோருஞ்சென்றுமாள்வோங் ✻
குயிரவழுந்தாமரையுங்கமழ்பழனக்குருநாட்டிற்கலந்துவாழ ......... ✻
உயிரனையாய்சந்துபடவுரைத்தருளென்றானறத்தினுருவம்போல்வான்...✻

[எ-து] வைராக்கியமென்னுங் கடூரமானநெருப்பை அதிகமாகமூட்டிவளர்த்தால் தானேயிழைந்தெரிந்து மாய்ந்துபோகின்ற மூங்கிற்காடென்று சொல்லும்படி குற்றம்பொருந்திய யுத்தத்திலே கோபமூண்டு இரண்டுதிறத்தோரும் ஒரேதரமாய் மாண்டுபோவோம், அப்படிவராமல் செவ்வல்லியும் தாமரையும் பரிமளிக்கின்ற வயல்கள்சூழ்ந்த குருநாட்டிலே அம்மலர்களைப்போல நாங்கள் ஒருமித்துக்கூடிவாழும்படி எங்களுயிரையொத்த ஸ்ரீகிருஷ்ணதேவரே நீர்தூதுபொருந்த அவர்களையும் எங்களையுங்கூட்டிய நளவேணுமென்றார் தருமத்தின்வடிவம்போலவிளங்கிய தருமபுத்திரர்-எ-று. (எ)

அரவுயர்த்தோனுடன்மறுசூதாடிநீர்வென்றவன்றளவன்றான்சொன்ன ..✻
விரதமொழிதவறாமல்வெங்கானம்போய்மீண்டீர்வெய்யோனுங்கள்...... ✻
குருநிலத்திற்பாதியுமேகொடாதிருந்தாலாங்கவனைக்கொன்றுபோரி. ... ✻
ல்குருநிலத்தையாளவினித்துணிவதேகடனென்றானம்பிரானே...... ......✻

(எ-து)சர்ப்பக்கொடிபடைத்த துரியோதனனுடனே நீங்கள்மறுசூதாடிவென்றபோ தவன் சொல்லியசொற்றவறாமல் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒருவருஷம் அக்கியாதவாசமும் போய்வந்தீர்கள் வெய்யவனாகிய அந்தத் துரியோதனன் உங்களுடைய பூமியிலே பாதியை கொடாமற்

பேர்ளுனேயாகில் அவனைக்கொன்று போர்முகத்திலே பெரியபூமியை ஆ ளுகைக்கு துணிவதேமுறைமையென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (எ)

குரவரையுங்கிளைஞரையுங்குலத்துரியதுணைவரையுங்கொன்றுபோர்வென்
றரவநெடுங்கடலாடையவனியெல்லாந்தனியாளுமரசதனில்..........*
கரவுறையுமனத்தானைக்குருனிக்குரைத்தமொழிப்படியேகானந்தோறும்..*
இரவுபகல்பலமூலசருகுநுகர்ந்திவ்வாழ்க்கையினிதாமன்றே............*

[எ-து] ஆசாரியனையும், சுற்றத்தாரையும்; குருகுலத்துக்குரிய அண்ணன்தம்பிமாரையும்; இன்னம் பாட்டன்-மாமன் மைத்துனன் முதலான பேரையுங்கொன்று போரில்வென்று சத்திக்கின்ற நெடியகடலாடையையுடைய பூமிமுழுவதும் தனியேயாளுகிற அரசைப்பார்க்கிலும் கபடந்தங்கியமனமுடைய பெரியதகப்பனார் புரோகிதருடனே சொல்லியனுப்பிய சொற்படியே வனந்தோறும் இரவும்பகலும் கனி காய் கிழங்கு சருகுகளைப்புசித்துப் பிழைத்துக் காலம்போக்குகிறது மிகவும்நல்லதென்றார் தருமபுத்திரர்-எ-று. (அ)

கோதிலானிந்தமொழிகூறுதலுமாதியான்கூறலுற்றான்..........*
மோதமருக்கிளைத்துநீர்மொய்த்தபெருங்கானகத்தேபுகச்சென்றால்..*
பூதலத்தோரேசாரோபுகன்றபெருவெஞ்சினமும்பொய்த்திடாதோ ... *
நீதியோவெனவுரைத்தானங்கதற்குநிகழ்தருமனிகழ்த்தலுற்றான்... *

[எ-து] பழுதில்லாத தருமபுத்திரமகாராசர் இந்தவசனம் சொன்னமாத்திரத்திலே ஆதிமூலமான ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லுவார்- தருமபுத்திரரே நீங்கள்மோதுகின்ற யுத்தத்துக்குத் தோற்று நெருங்கியபெரிய வனத்தினிடத்திலே வாசம்பண்ணவிரைந்துபோனால் பூலோகத்திலுண்டானபேர் தாயாதியுடனே யுத்தம்பண்ணிச் செயிக்கமாட்டாமற் போனார்களென்று ஏசமாட்டார்களோ தம்பிமார்சொன்ன சபதம்பொய்யாய்ப்போகாதோ இது நீதியாகுமோவென்று சொல்ல அதுகேட்டுப் பின்னுஞ்சொல்லுவார் தருமபுத்திரர்-எ-று. (௯)

நீதூதுநடந்தருளியெமதுநினைப்பவர்க்குரைத்தாலினைவின்வண்ணம்...*
தாதூளியளிமுரலுந்தண்பதியுந்தாயமுந்தான்றாராகில்.............*
மீதூதுவளைக்குலமும்வலம்புரியுமிகமுழங்கவெய்யகாலன்..............*
மாதூதர்மனங்களிக்கப்பொருதெனினும்பெறுவனிதுவசையுமன்றே...*

[எ-து] ஸ்ரீகிருஷ்ணசுவாமி தேவரீர் எங்கள்நிமித்தந் துரியோதனனிடத்துத் தூதுசென்று எங்களுடைய நினைப்பின்பிரகாரம் அவனுடனே பேசினால் அந்தப்படியே மகரந்தப்பொடியையூதி வண்டுகள்முரலுகின்ற குளிர்ந்த பூஞ்சோலைகள்சூழ்ந்த நகரமும் பங்குங்கொடாமற் போனானாகில் அதற்குமேல் ஊதப்பட்ட வெற்றிச்சங்குகளும் வலம்புரிச் சங்குகளும் வீரகாளம் வீரகொம்புமுதலிய நானாவிதவாத்தியங்களுமுழங்கக் கொடிய யமதூதர் மனங்களிப்ப போர்க்களத்திலே யுத்தஞ்செய்தாகிலும் தாயாதி

பட்சத்திலுள்ள எங்கள் பூமியைப்பெறுவோம் அது அபகீர்த்தியன்றென்று பின்னுஞ்சொல்லுவார் தருமபுத்திரரென்றவாறு. (௰)

மூந்தூர்வெம்பணிக்கொடியோ னெடுந்தூரினடைந் தருள்வர் முன்றிரைநும் ...*
நந்தூருமபுனநாட்டின் றிறம்வேண்டு நாடொன்றுமல்காணுகில்...........*
ஐந்தூர்வேண்டவையில்லையிலிந்தில்வேண்டவைமறுத்தாலடுபோர்வேண்
டும்,சிந்தூரத்திலதந்தந்சிந்துரத்தின்மருப்பொசித்தசெங்கண்மாலே..*

[எ-து] மூந்திநிற்கின்ற சர்ப்பக்கொடியையுடைய துரியோதனன் பதியான அஸ்தினபுரத்திற்குத் தேவரீர் எழுந்தருளிப் பள்ளர் முற்றங்கள் தோறுஞ் சங்கினங்களேறுகின்ற நீர்வளம்பொருந்திய நாட்டைக்கேளும், அதுகொடானாகில் எங்களைந்துபேருக்கும் இந்திரப்பிரஸ்தம்-யமப்பிரஸ்தம்-அவந்தி-வாரணாபுரி-அஸ்தினபுரி என்கிற ஐந்தூருங்கேளும், அவை இல்லையென்று மறுத்தானாகில் ஐந்துமனைகேளும், அவையும் இல்லையென்றால் யுத்தத்திற்குச் சம்மதித்துவாரும் சிந்தூரத் திலதம்பொருந்திய மதயானைக்கோடுமுறித்த வீரம்பொருந்திய சிவந்தகண்களையுடைய மாயனேயென்றார் தருமபுத்திரர்-எ-று. (௰௧)

மூத்தோன்மற்றிவ்வுரைப்பவிளையோன் வெஞ்சினமனத்தின்மூளமூள *
நாத்தோமிலுரைபதறக்கதுமெனவுற்றெழுந்திஞ்ஞசி ஞாலமெல்லாம்..*
பூத்தோனைப்பூந்தவிசிற்பூவைபொருமணிமார்பாபுன்மையாவும்... ......*
தீர்த்தோனேயூனமிலான்மானமிலாதுரைப்பதற்கென்செய்வதென்றான்.*

[எ-து] மூத்தவராகிய தருமபுத்திரமகாராசர் இந்தவசனஞ்சொல்ல வீமசேனன்கேட்டு அவன்மனதிலே கோபம் அதிகரிக்க நாவினிடத்திலேகுற்றமில்லாதசொற்கள் பதறச் சீக்கிரத்தில்வந்து எழுந்து ஸ்ரீகிருஷ்ண தேவரைத்துதித்துப் பூலோகமுழுது முண்டாக்கினவரோ பதுமாசனத்திலிருக்கின்ற மகாலட்சுமிபொருந்திய கௌஸ்துவாபரணந்தரித்தமார்பையுடையவரோ நம்பினபேர் குறைவுகளைத்தீர்த்தவரோ குற்றமற்ற அண்ணரியார் மானமில்லாமற் சொல்லுவதற்கு நான்செய்வதென்னென்று பின்னுஞ்சொல்லுவான் அந்தவீமசேனனென்றவாறு. (௰௨)

விரிகுழற்பைந்தொடிநாணிவேந்தவையின்முறையிடுநாள்வெகுளேலென்
மாபினுக்குநமக்குமுலகுள்ளளவுந்தீராதவசையேகண்டாய்... ... ... [றுவ
எரிகழற்கானகமகன்றுமின்னமும்வெம்பகைமுடிக்கவினையாய்நின்றாய். .*
அரவுயர்த்தோன்கெடுமையினுமுரசுயர்த்தோயுனதருளுக்கஞ்சினேனே*

[எ-து] விரிந்தகூந்தலையும், பசியவளையலையுமுடைய துரோபதி நாணமடைந்து-௲-லட்சத்து-௬௲-பட்டவர்த்தனரும், ௯-லட்சத்து - ௬௲௮-மகுடவர்த்தனரும், பதினெண்பூமி மன்னமண்டலீகரும், தேசத்துஇராசவர்க்கமும், பீஷ்மாச்சாரி-துரோணாச்சாரி-கிருபாச்சாரி - அசுவத்தாமா-கர்ணன்-சகுனி-சல்லியன்-அதிரதர்-மகாரதர்-சமரதர்- முதலிய சமஸ்தமானபேரும் நிறைந்த ராஜசபையிலே அபிமானபங்கம் பண்ணுவித்தநாளில் தஞ்சமில்லாத பேர்போலே முறையிட்டபோது நீகோபியாதே யென்

றுசொல்லி குருகுலத்துக்கும்மக்கும்பூலோகமுள்ளளவுந் தீராதபழிப்பு
வசனமுண்டாக்கினீர் அதுவுமல்லாமல் கள்ளக்கயிறுகொண்டு சூதாடித்
தீப்படுகின்ற காடே போகச்சொல்லிவிட அதை நீக்கியும் இன்னமுமக்
கொடியபகையைமுடிக்க நினைக்கின்றீர் ஆதலாலே துரியோதனனுடைய
கொடுமையைப்பார்க்கிலும் தருமபுத்திரரே உம்முடையகிருபைக்கு மிக
வும்பயந்தேனென்று பின்னுஞ் சொல்லுவான் வீமசேனன்-எ-று (௰௩)

காளைவினைவிடுத்த கண்ணிலாவருளிலிதன் காதன்மைந்தன்...........*
தானாளுந்தரணியெல்லாமொருகுடைக்கீழ் நீயாளத்தருவனின்றே......*
மேனாளைம்புரிமையறக்கவர்ந்தபெருந் துணைவனுனைபெறுதவன்னம்..*
வானாளவான்வர்கோன்றன்பதமற்றவன்றனக்கே வழங்குவேனே........*

(எ-து)உம்மைவனவாசம் போகச்சொன்ன கண்ணில்லாத திருதராட்டி
ரனுடைய ஆசைமிகுந்த குமாரனைதுரியோதனன்றாளுகின்ற பூலோ
கமெல்லாம் ஒருகுடைக்கீழ் இன்றைக்கே நீராளத்தருவேன் அதுவுமல்
லாமல் முன்னாளில் தம்முடைய ஆட்சியான நாட்டைக்கைக்கொண்ட அ
ந்தத்துரியோதனன் தேவரீரைவெறுத்து விடாதபடி அவனுக்கு வீரசொ
ர்க்கத்தையாளும்படி இந்திரபதத்தைத்தருவேனென்று பின்னுஞ் சொல்
லுவான் வீமசேனன்-எ-று. (௰௪)

போர்முடித்தானமர்பொருதுபுலம்புறுசொற் பாஞ்சாலிபூந்தன்கூந்தற் *
கார்முடித்தானிளையோன்முன் கழறியவஞ்சினைமுடித்தான்கடவுட்கங்கை*
நீர்முடித்தானிரவொழித்தநீயறியப் பூதலத்தினிலைநின்றோங்கும் ... ...*
பேர்முடித்தானிப்படியேயார்முடிப்பா ரிவனுடனேபிறந்தேனென்றான். *

(எ-து) ஸ்ரீகிருஷ்ணதேவரே எங்களண்ணவியார் துரியோதனனுடனே
யுத்தஞ்செய்துமுடித்தார் மேகம்போன்ற கூந்தலையும் புலம்புகின்ற சொ
ல்லையுமுடைய துரோபதி முடிக்கச்செய்தார் தம்பிமார் சபையிலேபேசிய
சபதங்களைமுடிப்பித்தார் தெய்வத்தன்மை பொருந்திய கங்காசலமுடித்த
உருத்திரதேவர்கையிலே பிரமகபாலங்கொண்டு இரப்பதைத் தவிர்த்தரு
ளிய உம்முடைய சித்தமறிய பூலோகத்திலே நிலைநின்றுயர்ந்த கீர்த்திமா
னென்னும் பேர்பிரசித்தமாகமுடித்தார் இப்படி யாவர்முடிக்கப்போகிறார்
கள் இவருடனேபிறந்த நான் கீர்த்திபெற்றது போதுமென்று பின்னுஞ்
சொல்லுவான் வீமசேனன்-எ-று. (௰௫)

அணிந்துவருஞ்சமரிலெதிர் தரவுயர்த்தோனுடனரசருடலமெல்லாந் *
துணிந்திரண்டுபடப்பொருது தொல்லையுலகரசாளத்துணிவதல்லால் ...*
தணிந்தறமுங்கிளையுறவுங் கொண்டாடித்தானினந்தனித்தூதேவிப் ...*
பணிந்திரந்துபுவிபெற்றுவன் டிருப்பதற்கே துணிகின்றான்பட்டபாடே..*

(எ-து) போர்க்கோலங் கொண்டுவருகிற பெரியயுத்தத்திலேயெதிர்த்து
துரியோதனனுடனே யெதிர்த்த அரசர்களுடைய சரீரங்களெல்லாம் இர
ண்டுதுண்டாகும்படி போர்செய்து பழைய பூலோகமுழுதும் அரசாட்சி

செய்யத் துணிவதல்லால் பொருமைகொண்டு தருமத்தையுங் கிளையுறவு ம்பாராட்டி இன்னம் ஒப்பற்றதூதுவிட்டு அவனைவணங்கிப் பூமியையாசி த்துப் பெற்றுக்கொண்டு சவுக்கியமாகப் புசித்திருக்கவே யெண்ணுகின் றான் தருமபுத்திர மகாராசர் குலகுலம்பட்ட பாட்டை என்னசொல்வே னென்றான் வீமசேனன்-எ-று. (௰௫)

பரிவுடன்மற்றிவைகூறும் பவனகுமாரனை மலர்க்கைப்பணிந்துநோக்கி *
குருகுலத்தோர்போரோமேகுற்றமது பார்க்குங்காற்சுற்றமுண்டோ ......*
வொருகுலத்திற்பிறந்தார்களுடன்வாழும்வாழ்வினைப்போலுறுதியுண்டோ
இருவருக்கும்வசையன்றோ விருநிலங்காரணமாகவெதிர்ப்பதென்றான். .*

(எ-து) இப்படிப்பரிவாகச்சொல்லிய வாயுபுத்திரனாகிய வீமசேனனை மலர்போன்ற கைபாலமர்த்திப்பார்த்துக் குருவம்ச சிகாமணியே குற்றம் பார்க்குமிடத்தில் சுற்றமுண்டோ ஒருகுலத்திலேபிறந்த அவ்வண்ணந்தம்பி மாருடனே கூடிவாழும் வாழ்வினைப்போல் வேறொரு உறுதியுண்டோ பெ ரிய இப்பூமியைப்பெறுவது காரணமாகயெதிர்ப்பது நம்மிருவருக்குங்கு ற்றமல்லவோ வென்றார் தருமபுத்திர மகாராசர்-எ-று. (௰௬)

உரிமையுளதம்பியர்களுணர்வறியா மையினவைக்கணுரைத்தமாற்றம் ...*
பரிபவமோகேட்டோர்க்குப் பரிபவமென்பதுபிறராற்பட்டாலன்றோ ...*
கருதிலதுமற்றெவர்க்குமொவ்வாதோ கண்மலரிற்கைபடாதோ [ன்பான்
பொருதொழிலுங்கடைநிலத்திற் கிடந்ததேனேயெனமொழிந்தான்புகழே

(எ-து) உரிமையுள்ள தம்பிமார்கள் அறியாமையினாலே சபையிலேசொ ன்னவார்த்தைகள் நமக்கு இழிவை யுண்டாக்குமே இழிவென்பது அன் னியரால் சொல்லப்பட்டாலல்லவோ அதுநினைக்குமிடத்தில் ஒருவருக்கு ம்பொருந்தாதோ கண்மலரிற் கைப்பட்டால் அந்தக்கையைத் துணிக்கலா மோ யுத்தமும் பின்னடியிருக்குமென்றார் கீர்த்தியையே தரிக்கின்ற தரும புத்திரமகாராசன்-எ-று. (௰௭)

சூடுகின்றதுழாய்முடியோன் சுரருடனேமுனிவர்களுஞ்சுருதிநான்கும் *
தேடுகின்றபதஞ்சிவப்பத் திருநாடுபெறத்தூதுசெல்லவேண்டாம்... ...*
வாடுகின்றமடப்பாவைதன்வரமு மென்வரமும்வழுவாவண்ணங்........*
கோடுகின்றமொழியவன்பாலெனைத்தூது விடுகவினிக்கொற்றவேந்தே...*

(எ-து) துளபமாலையணிந்த ஸ்ரீகிருஷ்ண தேவரானவர் தேவர்களும் முனிவர்களும் நாலுவேதங்களும் இன்னந்தேடுகின்ற பாதஞ் சிவப்பட ந்து நாம்நம்முடைய திருநாடுபெறும்பொருட்டுத் தூதுசெல்லவேண்டா ம் வாடுகின்ற துரோபதியினுடைய பிரதிக்கினைதப்பா என்பிரதிக்கினையுந் தப்பாதவிதந் துரியோதனனிடத்தில் என்னைத்தூதாக அனுப்புந் தருமபு த்திரரேயென்றான் வீமசேனன்-எ-று. (௰௮)

மலைகண்டதெனவெள்கைம் மலர்த்தண்டின்வலிகண்டுமகவான்மைந்தன் *
சிலைகண்டுமிருவர்பெருந்திறல்கண்டு மெமக்காகத்திருமாலின்ற........*

நிலைகண்டுபின்னவன்விரித்தகுழல்கண்டு மிமைப்பளவிலீனாயார்தம்மைக் ...*
கொலைகண்டுமகிழாமலவன்குடைக்கீழுயிர்வாழக்குறிக்கின்றீரோ ... ...*

(எ-று) மலையைக்கண்டதென்ன என்கையிலிருக்கின்ற தண்டாயுதத்தினுடைய ப்ரபலங்கண்டும் அர்ச்சுனனுடைய காண்டீபத்தின் வலிமைகண்டும் நகுலசகாதேவருடைய வல்லமைகண்டும் - நமக்குச் சகாயமாக கிருஷ்ணதேவரிருக்கும் நிலைகண்டும் இந்தத்துரோபதிவிரித்த அளகபாரங்கண்டும் ஒருநிமிஷமாத்திரத்தில் துரியோதனாதியைச் சர்வசங்காரம்பண்ணா மகிழ்ச்சியடையாமல் பகையாளிக் குடைக்கீழேவாழும்படி. குறித்திருக்கிறீர் தருமபுத்திரரேயென்றான் வீமசேனன்-எ-று. (௨௰)

வெம்புயவீமனும்வெகுண்டு மீண்டுமிவைவெடுத்துரைப்பமேகமேனிப் *
பைம்பொனெடுந்தனித்திகிரிப் பாந்தாமன்கருணையுடன்பரிந்துநோக்கி *
யம்புவியின்முன்பிறந்தோராக நெறிமுறைமையுரைத்தலதுகேளாமற் ... ...*
றம்பியருமறுப்பரோதலைவனிக் கடுங்கோபந்தணிகவென்றான் .......*

(எ-று) வலியபயமுடைய வீமசேனனுங்கோபித்து மறுபடியும் இந்த வசனங்கள்சொல்ல மேகம்போன்ற திருமேனியும் பசியபொன்போன்ற நெடிய ஒப்பற்ற சக்கிராயுதமுமுடைய கிருஷ்ணதேவர் கிருபையுடன்பரிவுகொண்டுபார்த்துப் பூமியிலே முன்பிறந்த தமையன்மார் இராஜநீதிமுறைமைசொன்னாலதைக்கேளாமல் தம்பியாரானபேர் மறுப்பார்களோ தலைமைபெற்ற வீமசேனனே இனி கடியகோபத்தைச் சகிக்கக்கடவாயென்று திருவுளம்பற்றினார்-எ-று. (௨௧)

மைக்காளமுகனூர்திவானவர்கோன் றிருமதலைவணங்கிநின்று ...... ......*
முக்காலங்களுமுணருமுகுந்தனுக்குமுதல்வனுக்குமொழிந்தான்மன்றோ
அக்காலம்பொறுத்ததெல்லாமமையாமன்னமிருந்தறமேசொன்னால் ...*
எக்காலம்பகைமுடித்துத்துரோபதியுங் குழன்முடிக்கவிருக்கின்றாளே. *

(எ-று) மைபோலுங் கரியமேகவாகனனான தேவேந்திரனுடைய குமாரனான அர்ச்சுனன் வணக்கஞ்செய்துநின்று இறந்தகாலம்-நிகழ்காலம்-எதிர்காலமென்னும் மூன்றுகாலங்களையுமறியும் ஸ்ரீகிருஷ்ணதேவருக்கும் தருமபுத்திரருக்குஞ்சொல்லினன் அதென்னெனில் அந்தக்காலத்திலே துரியோதனன்பண்ணின குற்றங்களைப்பொறுத்த பொறுமையெல்லாம்போதாமல் இன்னமிருந்து தருமத்தையே சொல்லினால் இனியெந்தக்காலத்தில் பகையைமுடித்துத் துரோபதியுங் கூந்தலைமுடிக்கவிருக்கிறாளென்று பின்னுஞ்சொல்லுவான்-எ-று. (௨௨)

தேவராயினும்பழைய தயித்தியராயினுமற்றுஞ்செப்புகின்றோர் .......*
யாவராயினுமெதிர்த்தோருயிருணவென் றிருப்பதுவாமென்கைவாளி ...*
மூவராயவர்களுக்கு முதல்வனாகியமூர்த்திமுகிலேய்ப்புக ..................*
மீவாதுகளுடம்பயற்குருநாடே னிவனவன்பால்வேண்டுமாறே... ... ...*

(எ-து) தேவர்களானாலும் பழையவசுரர்களானாலும் பின்னுஞ்சொல்லுகிற வலிமைபெற்றபேர் எவர்களானாலும் எதிர்த்தபேர்களுடைய உயிரைத்தனக்குப் புசிப்பென்று நினைந்திருப்பது என்கையானையானது திரிமூர்த்தியானவர்களுக்கு முதல்வராகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியே மேகந்தோய்கின்ற கமுகின்மேல் வராலினம் பாய்கின்ற கழனிகள் சூழ்ந்த குருநாட்டை என்னநிமித்தம் யித்தருமபுத்திரர் துரியோதனனிடத்திலே வேண்டுகின்றதென்று பின்னுஞ் சொல்லுவான் அர்ச்சுனனென்றவாறு. (௨௩)

தீண்டாதகற்புடையசெழுந்திருவைத் துகிலுரியச்செயலொன்றின்றி ...*
நீண்டோனேகரியோனே நிமலாவென்றரற்றலொய்நின்றுசோர ...... ...*
மாண்டார்போலதுகண்டு மன்னவையில்யாமிருந்தமாசுதீர ..............*
வேண்டாமோவேண்டுவது மேம்படுநல்லறமேயோவேந்தர்வேந்தே. ...*

(எ-து) அக்கினியைப்போல் தீண்டப்படாத பதிவிரதையுமுடைய துரோபதியைச் சபையிலே துரியோதனன் துச்சாதனனை விட்டுத் துகிலுரிந்தபோது அவள் யாதொருசெயலு மில்லாதவளாய் நெடியவனே நீலவண்ணனே நிர்மலசொரூபனே யென்றுமுறையிட்டவளாகி நின்று சோர்வையடைய நிர்ச்சீவரானபேர்போலே அதைக்கண்டும் இராஜசபையிலே யாங்களனைவருமிருந்த குற்றந்தீரவேண்டாமோ அவனிடத்திலே பூமியை யாசிப்பது நல்லதருமந்தானோ மன்னர்க்கு மன்னனாகிய தருமபுத்திரனே யென்று பின்னுஞ் சொல்லுவான்-அர்ச்சுனனென்றவாறு. (௨௪)

பொன்னுருந்திகிரியினன்போனாலும் புகழ்வேந்தன்புகன்றவெல்லாஞ் ...*
சொன்னாலுமவன்கேளான்விதிவலியாற் கெடுமதிகண்டோன்றாதன்ற...*
எந்நாளுமுவர்நிலத்தி நல்விளைவித் திடினும்விளைவெய்திடாது... ... ...*
பன்னகந்தனக்கமிர்தங்கொடுத்தாலும் விடமொழியப்பயன்கொடாதே. .*

(எ-து) பொற்பிரகாசம் பொருந்திய சக்கரத்தையுடைய கிருஷ்ணதேவர் தூதாகப்போனாலும் புகழையுடைய தருமபுத்திரர் சொன்னவார்த்தைகளெல்லாஞ் சொன்னாலும் அந்ததுரியோதனன் கேளான் விதியினுடைய வலிமையாலே கெடுமதி கண்ணுக்குத் தோற்றாது எந்நாளுங் களர்நிலத்திலே நல்லவிதைகளை விதைத்தாலும் விளையமாட்டாது பன்னகமுடைய சர்ப்பத்திற்குப்பால்கொடுத்து வளர்த்தாலும்விஷத்தையல்லாமல்வேறொருபயனைக்கொடாது-எ-று.
(௨௫)

பார்த்தனிவைபுகன்றிறைவன்பணித்தருளவிருந்ததற்பின்பரிவினோடும் .*
தீர்த்தனிருபதமிறைஞ்சித்தருமனையுங்கைதொழுது சினங்கொள் வேலா
நீத்தநெடுங்கடலெழுபாரடலவர்பெறுவதொனறுமிகழ்ச்சிபொய்யோ... [ன்
கோத்தருமன்றனியாண்மைகூறுதோகூறுகநீகொற்றவேந்தே ... ... ...*

[எ-து] அர்ச்சுனன் இந்தவசனஞ்சொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர்கையமைக்கவிருந்தபின்பு நகுலனானவன் அன்புடனே ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய இரண்டுபாதங்களையும்வணங்கித் தருமபுத்திரனையும்வணங்கி மு

ன்னிழந்த சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பெருமையொருத்திய பஞ்சபா ண்டவர்பெறுவார்களென்று சொல்வதுபொய்யோ தருமபுத்திர மஹாராஜ ருடைய ஒப்பற்ற சௌரியஞ்சொல்லவோ நீ சொல்வாய் வெற்றியையு டைய வாசனையென்று பின்னுஞ்சொல்லுவானென்றவாறு. (உக)

கேவலந்தீர்வரியபகைகிடைக்குமெனிற்றிகிரியோன்றெனுந்
கோவலன்போயுரைத்தாலுங்குருநாடுமரசுமவன்கொடுக்கமாட்டான் ... ✽
நாவலம்பூதலத்தரசர்காடுறைந்தாரெனநம்மைநகையாரல்லவோ ...... ✽
காவலன்றன்படைவலியுமெனதுதடம்புயவலியுங்காணலாமே ... ... ... ✽

(எ-று) கேவலமாகத் தீர்வதற்கு அரியபகையிருக்க மேகந்தெரியின்ற அதிகமழைக்குப் பசுக்களைக்காக்கும்பொருட்டு கோவர்த்தனை பர்வதத்தைக்கையிலேந்திய கிருஷ்ணனே தேவர் தூதுபோய்ச்சொன்னாலுங் குருநாட்டையும் அரசையும் அத்துரியோதனன்கொடுக்கமாட்டான் ஆகையால் ஜம்புத்தீவாகிய இந்தபூமியிலேயிருக்கின்ற அரசர்கள் காட்டையிருப்பிடமென்று நம்மைநகையாதபடி துரியோதனனுடைய சேனைவல்லமையும் என்னுடைய விசாலமாகிய புஜவல்லமையும்பார்க்கலாமென்று பின்னுஞ்சொல்லுவான் நகுலனென்றவாறு. (உஉ)

அன்னநடையரம்பைதனைப்புணர்கவர்ந்திடவிமையோரரசுக்காக ...... ✽
முன்னமவருடன்பொருதுசிறைமீட்டானெங்குலத்துமுதல்வனன்றோ ... ✽
மன்னவையில்யாங்காணமடவாளைத்துகிலுரிந்தவலியோன்றன்பால் ... ✽
இன்னமிரந்தவன்குடைக்கீழிருந்தக்காலம்மையுலகென்சொல்லாதோ ... ✽

(எ-று) அன்னம்போல் நடையையுடைய தேவமாதையை அசுரர்கள் பிடித்துக்கொண்டுபோக அப்போது அவன் பயந்து கேட்டுக்கொண்டதற்கிரங்கி இந்திரன்பொருட்டு முற்காலத்திலே அந்த அசுரருடனே யுத்தஞ்செய்து சிறைமீட்டவன் நம்முடைய குலத்துக்குத்தலைவனாகிய புரூரச்சக்ரவர்த்தி யல்லவோ இராஜசபையிலே நாம்காணும்படிக்குத் துரோபதியைய அவமானங்கள்செய்த வலிமையையுடைய துரியோதனைவிட்டு இன்னம் யாசித்து அவன்குடைக்கீழிருந்தால் நம்மை உலகம் என்னசொல்லாதென்று பின்னுஞ்சொல்லுவான் நகுலன் -எ-று. (உ௩)

கானெறிபோய்க்கரந்துறைந்துகடவாநாட்கழித்ததற்பின்கானநீங்கி ..... ✽
ஈனமிலாவகைவந்தார்கட்டுணைவனெனச்சிறுபதிகாதாகில் .............. ✽
மானகரும்வளநாடுமுரிமையுந்தன்மொழிப்படியேயளியாதாகில் ...... ✽
தானறியாதவன்பிறர்போய்க்கற்பித்தாற்படுவனோதானைவேந்தே ......... ✽

(எ-று) வனவாசம் பன்னிரண்டுவருஷமும், அக்ஞாதவாச மொருவருஷமும் இருந்து கழித்தபிற்பாடு காட்டைவிட்டு சனமில்லாதபடி வந்தார்கள் நம்முடைய அண்ணன்தம்பிமார்களென்று கொஞ்சமும் பிரக்கத்தெய்யாதாகில் தாயாதிபட்சமுண்டான மகத்தாகிய நகரமும்வனத்தையுடையநாடும் மற்றுமுங் தன்சொல்லின்படியே கொடாமற்போனாலும் து

னையறியாதவன் ஒருவர்போய்ச்சொன்னு லறிவாரோ பூமிக்கரசனுகிய த
ருமபுத்திரரேயென்றுன் நகுலனென்றவாறு. (௨௯)

நகுலனிவையெடுத்துரைப்ப நன்றெனக்கையமைத்தருளி நகுலன்சொல்
லும், மிகல்விஜயன்றன்மொழியுந்திறல்வீமனியம்பியதும்யாவுங்கேட்டோம்
புகலரியவுணர்வுடையோய்புகழுடையோய்திறலுடையோய் புகலியென்ன
முகிலனையதிருமேனிமுகுந்தனுக்குமனமுருகமொழிகின்றுனே ...... ※

(எ-து) நகுலனிந்தவசனஞ்சொல்ல நல்லதென்று கையமைத்தருளி ந
குலன்சொன்னதும், வலிமையுடைய அர்ச்சுனன்சொன்னதும், சௌரிய
த்தையுடைய வீமசேனன்சொன்னதும், எல்லாங்கேள்விப்பட்டோம்சொ
ல்லுதற்கரிய வறிவையுடையவனே கீர்த்தியையுடையவனே சௌரியத்
தையுடையவனே உன்கருத்தை நீசொல்லென்றுகேட்க கரியமேகத்தைத
யொத்த திருமேனியையுடைய கிருஷ்ணதேவனைப்பார்த்து மனமுருகு
ம்படி சொல்லுவான்சகாதேவனென்றவாறு. (௩௰)

சிந்தித்தபடிநீயுஞ்சென்றுலென்றவிர்ந்தாலென்செறித்தநூறு... ... ...※
மைந்தர்க்குமுதல்வனிலம்வழங்காமலிருந்தாலென்வழங்கிலுலென் ... ※
கொந்துற்றகுழலிவளுமுடித்தாலென்விரித்தாலென்குறித்தசெய்கை... ※
யந்தத்தின்முடியும்வகையடியேற்குத்தெரியுமோவாதமூர்த்தி..........※

(எ-து) ஆதிநாராயணனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவரே நீர் நினைத்தபடியே
தூதுபோனுலென்ன அதைவிட்டாலென்ன துரியோதனன் பூமிகொடாவி
ட்டா லென்னகொடுத்தாலென்ன பூங்கொத்தையுடைய அளகபாரத்தைத
இத்துரோபதைமுடித்தாலென்ன விரித்தாலென்ன நினைத்தகாரியம் முடி
விலே முடியும்விதம் அடியேனுக்குத் தெரியுமோவென்றுன் சகாதேவன்
என்றவாறு. (௩௧)

முருகவிழ்க்கும் பசுந்துளபமுடியோனே யன்றலகைமுலைப்பாலுண்
டு, மருதிடைச்சென்றுயர்சகடம் விழவுதைத்துப் பொதுவர்மனைவளர்ந்த
மாலே, ஒருவருக்குந்தெரியாதிங்குன்மாய்கை யானறிவேனுன்னையா மத்
திருவுளத்துக்கருத்தெதுவோ வதுவெனக்குங்கருத்தென்றுன் தெய்வமன்
னுன்...........................................................................※

(எ-து) வாசனைவீசுகின்ற பசியதுளபமாலையையணிந்த கிரீடத்தையு
டையவரே, அன்று பூதகியினுடைய முலைப்பாலுண்டு சாபம்பெற்றிருந்த
மருதமரத்தினிடையிலே புகுந்தொடித்து உயர்ந்தபண்டியைவிழும்படி
யுதைத்து யாதவர்மனையில்வளர்ந்தருளிய கிருஷ்ணதேவரே, இங்கே நீர்
செய்கின்றமாயம் ஒருவருக்குந்தெரியாது எனக்குத்தெரியுமானையால்சத்
தியமாக உம்முடைய திருவுளத்திற்கு நினைப்பு எதுவோ அதுவே எனக்
குங்கருத்தென்றுன் தெய்வத்தையொத்த சகாதேவனென்றவாறு. (௩௨)

இவ்வண்ணஞ்சகாதேவனியம்புதலுநகைத்தருளியிகலோர்சொன்ன ...※
அவ்வண்ணம்புகலாமல்விரகுரைத்தானிவனென்னவவனேடாங்கோர்...※

றைபவன்னமணிக்கூடந்தனிலெய்திப்பார்தப்போர்புரிவாவண்ண [லான்
முய்வண்ணமுஞ்சொல்லுக நீயுபாயமெனத்தொழுதாக்கானூங்கொள்வே

(எ-று) இந்தப்பிரகாரஞ் சகாதேவன் சொன்னமாத்திரத்திலே கிருஷ்ணதேவர் புன்சிரிப்புகொண்டு தருமபுத்திராதியர் சொன்ன அவ்விதஞ் சொல்லாமல் இவன் உபாயமாகச் சொன்னானென்று அவனுடனே அங்கே யாகத்திலிருந்த விசுவக்கர்ப்ப மிருக்கின்ற ஒரு ஏகாந்த ஸ்தானத்திலே போய் இந்தப்பாரதயுத்தஞ் செய்யாவிதம் பேசுகிறபடி உபாயஞ் சொல்லென்று கேட்க அவனை வணங்கிச் சொல்லுவான் சகாதேவனென்றவாறு. (௰௩)

வேறு.

நீபாரதவமரில் யாவரையு நீறாக்கிப்............ ※
பூபாரந்தீர்க்கப்புரிந்தாய்புயல்வண்ணா............ ※
கோபாலாபோரேறே கோவிந்தாநீயன்றி............ ※
மாபாரதமகற்ற மற்றார்சொல்வல்லாரோ............ ※

(எ-று) ஸ்ரீகிருஷ்ணதேவரே, நீர் பாரதயுத்தத்திலே சர்வதேசத்து இராஜவர்க்கத்தையுங் குருக்ஷேத்திரத்திலே கூட்டிச் சம்ப லாக்கிப் பூமிபாரந் தீர்க்க இந்த யத்தனஞ்செய்தீர் மேகவண்ணரே பசுக்களைப் பரிபாலனஞ் செய்தவரே யுத்தத்திற்கு ஆண்சிங்கம்போன்றவரே கோவிந்த ரே உம்மையல்லாமல் இந்தமகாபாரதத்தை நீக்கவல்லவர் வேறேயாரிருக்கிறார்கள் சொல்லுமென்று பின்னுஞ்சொல்லுவான் சகாதேவ னென்றவாறு. (௰௪)

பாராளக்கன்னனிகல்பார்த்தனைமுன்கொன்றணங்கின்.. ※
காரார்குழல்களைந்து காலிற்றளைபூட்டி............ ※
நேராகக்கைப்பிடித்துநின்னையும்யான்கட்டுவேனேல்.... ※
வாராமற்காக்கலா மாபாரதமென்றான்............ ※

(எ-று) கர்னனைப் பூமியாளும்படி பட்டங்கட்டி அவனைக் கொல்லுகிறேனென்று பகைத்திருக்கின்ற அர்ச்சுனனை முன்னேகொன்று துரோபதியினுடைய கூந்தலைக்களைவித்து காலிலேவிலங்குபூட்டி நேராகக் கையாற்பிடித்து உம்மையும் யான் கட்டுவேனேயானால் இந்த மகாபாரத யுத்தம் வாராமற்படிக்குக் காக்கலாமென்றான் சகாதேவனென்றவாறு. (௰௫)

முன்னைநீகூறியவையெல்லாமுடித்தாலும்............ ※
என்னைநீகட்டுமா றெவ்வாறெனமாயன்............ ※
உன்னைநீதானு முணராதாயுன்வடிவங்............ ※
தன்னைநீகாட்டத் தனைக்கட்டுவேன்யானென்றான்........ ※

(எ-று) திருமாலானவர் முன்னே நீசொல்லியபடி அவைக ளெல்லாஞ் செய்துமுடித்தாலும் என்னை நீ பிடித்துக்கட்டும்விதம் எப்படியென்று

கேட்க உம்முடைய பெருமையறியாத நீர் உம்முடைய வடிவைக் காட்டினால் நான்கட்டுவேனென்றான் சகாதேவனென்றவாறு. (௩௪)

மாயவனுமன்பன் மனமறிவான்கட் டுகவென்
றூயவடிவு பதினாயிரங்கொண்டான்
தூயவனுமூலமாந் தோற்றமுணர்ந்தெவ்வுலகும்
தாயவடியிணைக டன்கருத்திற்பிணித்தான்

(எ-று) ஸ்ரீகிருஷ்ணதேவரும் அன்பனுடைய மனமறியும்படி நம்மைக்கட்டும்பார்ளாமென்று தமதிச்சையினாலாகிய பதினாயிரம் வடிவு கொண்டார் பரிசுத்தனாகிய சகாதேவனும் அவ்வடிவுகளுக்கெல்லாம் ஆதியாகிய வடிவை ஞானத்தாலறிந்து எந்தவுலகத்தையுந் தாவியளந்த இரண்டுபாதங்களையும் தன்கருத்தாகிய கயிற்றினாலேகட்டினான்-எ-று. (௩௫)

நீதேவனென்றறிந்து நெஞ்சாற்றனைக்கட்டுஞ்
சாதேவன்கண்களிக்கத்தானேயாய்முன்னின்றான்
பூதேவருங்கனகப்பூங்காபூவைவரும்
யாதேவருந்தேடிக் காணாமலரடியோன்

(எ-று) பதினாயிரம்வடிவிலே மூலமாகிய வடிவையறிந்து நீ கண்டேவனென்று நிச்சயித்து மனதினாலே தன்னைக்கட்டிய சகாதேவனுடைய கண்கள் களிக்கும்படித் தானேயாகிப் பிரத்தியட்சமாய்நின்றார் பூலோகத்துத்தேவரும் பொன்மயமாகிய மலர்களையுடைய பஞ்சதருவின்நிழலிலே தங்கிய பெருமைபொருந்திய தேவர்களுந் தேடிக்காணாத தாமரைமலரையொத்த பாதங்களையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று, (௩௬)

அன்பாலின்றென்னையறிந்தேபிணித்தநம்மந்தா
யென்பாதந்தன்னை யினிநீவிடுகவென
வன்பாரதப்போர்வந்தடைந்தவைவரையும்
நின்பார்வையாற்காக்கவேண்டுநெடுமாலே

(எ-று) பத்தியினாலே இன்று என்னையறிந்து கட்டியபிள்ளாய் என்னுடைய பாதத்தை இனி நீவிடக்கடவாயென்று கிருஷ்ணதேவர் சொல்ல வன்மைபொருந்திய பாரதயுத்தத்திலே வந்துசேர்ந்த எங்களைவரையும் உம்முடைய கடாட்சத்தினாலே ரட்சணைசெய்யவேண்டும் நெடிய மகாவிஷ்ணுவேயென்றான் சகாதேவன்-எ-று. (௩௭)

என்னென்றிறைஞ்சி யிருதாமரைத்தாளி
லொன்றுங்கதிர்முடியாற்கோமென்றுரைத்தருளி
இன்றிங்கிருவோருமிப்போதுரைத்தமொழி
யொன்றும்பிறரறியவோதாதொழிகென்றான்

(எ-று) இப்படியென்றுசொல்லிவணங்கி இரண்டுதாமரைமலர்போன்ற பாதங்களில்நமஸ்கரித்த சகாதேவனுக்கு நிச்சயஞ்சொல்லி இன்று

நாமிரண்டுபேரும் இப்போது பேசியசொல்லொன்றும் அன்னியராயச்
சொல்லாதேயென்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௪௰)

ஆண்டிருந்தவனைநீங்கியறிவுடையோரிருவோரும் ... ✻
பாண்டவர்கள்முனைவைத்தப்பழுதில்புகழ்பாஞ்சாலி.. ✻
நீண்டகருங்குழல்சோர நின்றுனைமுகநோக்கி... ... ... ✻
ஈண்டவரில்லேயோவெச் சந்தாபிகவினிதென்றுன்...... ✻

(எ-து) அவ்விடத்தேயிருந்த சபையினின்றும் நீங்கியறிவுடைய அ
வ்விரண்டுபேரும் தருமபுத்திரர் முதலானோரிருக்கின்ற சபைக்குவர அப்
போதுகுற்றமற்ற கீர்த்தியையுடைய துரோபதியானவள் நெடியகருமை
பொருந்திய அளகபாரஞ் சோரநின்றுள் அவள்முகத்தைப்பார்த்து கிரு
ஷ்ணதேவருக்கிளையவராகிய சாத்தகியாழ்வார் இந்தச்சமயம் மிகநல்லது
நீகேட்கவேண்டியவைகளைக் கேளென்றார்-எ-று. (௪௧)

தருமனுக்குங்கருத்திதுவே தமருடன்போர்புரியாமை ......... ✻
வீருநிலத்திறுடன்வாழ்த லிவர்க்குநினைவென்றுரைத்து...... ✻
வரிமலர்க்கண்புனல்சோர மலர்மதநற்குழல்சோர............... ✻
விரிமலர்ச்செஞ்சேவடிக்கீழ் வீழ்ந்தழுதாண்மின்னனையாள். ✻

[எ-து] சாத்தகியாழ்வார் சொன்னவசனங்கேட்டு ஞாதிகளுடனேயு
த்தஞ்செய்யாமல் பெருமைபொருந்திய பூமியிலே கூடிவாழ்வே தருமபு
த்திரருக்குங்கருத்து இந்தச்சகாதேவர்க்கும் இதுவே கருத்தென்றுசொ
ல்லி செவ்வரிபரந்த நீலோற்பலமலரையொத்த கண்களிலே நீரொழுகப்
பூமுடித்தலைமறந்து அளகபாரமுஞ் சோர்வையடைய என்னுடைய பிரதி
க்கினை எவ்விதத்தில் முடியுமென்று கிருஷ்ணதேவருடைய விரிந்த தாம
ரைமலரையொத்த சிவந்த திருவடியிலே விழுந்து பிரலாபித்தாள் மின்னை
லையொத்த வடிவையுடைய துரோபதி-எ-று. (௪௨)

சாலக்கனகன்றனி மைந்தனைமுனிந்த.............. ...... ✻
காலத்தவனழைத்த கற்றூணிடைவந்தாய்................. ✻
மூலப்பேரிட்டழைத்த மும்மதமால்யானைக்கு... ...... ✻
நீலக்கிரிபோன்முன் னின்றநெடுமாலே ......... ...... ✻

[எ-து] ஆதிநாராயணன் எங்கேயிருக்கின்றான் இந்தத்தூணிலுமிருப்
பானோ சொல்லடாவென்று தன்னுடைய ஒப்பற்ற குமாரனாகிய பிரகலா
தனை மிகவும் இரணியனானவன் கோபித்தகாலத்திலே அவனுலவையப்
பட்ட கற்றூணிலே நரசிங்க உருவங்கொண்டு வந்தாய் ஆதிமூலமே யெ
ன்று பெயரிட்டழைத்த மும்மதங்களையும் பொழிகின்ற பெரியயானைக்கு
நீலகிரிபோல எதிரேயெழுந்தருளி வந்தநெடிய மகாவிஷ்ணுவே யென்று
ள் துரோபதி-எ-று. (௪௩)

கற்றைக்குழல்பிடித்துக் கண்ணிலான் பெற்றெடுத்தோன்
பற்றித்துகிலுரியப் பாண்டவரும்பார்த்திருந்தார்... ...✻

கொற்றத்தனித்திகிரிக் கோவிந்தாநீயன்றி ..............*
அற்றைக்குமென்மான மார்வேறுகாத்தாரோ...... ... ...*

[எ-து] கற்றையாகிய என்னுடைய அளகபாரத்தைப் பிடித்துத்திரு
தராட்டிரன்பெற்ற குமாரனாகிய துர்ச்சாதனன் மானபங்கமாக என்னுடை
ய துகிலைப்பற்றி உரியும்போது பஞ்சபாண்டவரும் பார்த்திருந்தார்கள்
வெற்றிபொருந்திய ஒப்பற்ற சக்கிராயுதத்தையுடைய கிருஷ்ணதேவரே
உம்மையல்லாமல் அன்றைக்கும் என்மானத்தை வேறேயார்வந்து காத்
தார்களென்று பின்னுஞ்சொல்லுவாள்-துரோபதி-எ-று. (௬௪)

மன்றிலழைத்தெனக்கு மாசளித்தமன்னவன்பாற் .....*
சென்றுதமக்கைந்தூர் திறல்வீரர்பெற்றிருந்தால் ... ...*
அன்றுவிரித்தவருங் கூந்தல்வல்வினையேன் ...... ......*
என்றுமுடிப்பதினி யெம்பெருமாளென்றழுதாள்... ...*

[எ-து] சபையிலே யழைத்து எனக்குக்குற்றத்தைத்தந்த துரியோ
தனனிடத்திற்போய்ச் சுத்தவீரராகிய பஞ்சபாண்டவர் தமக்கு ஐந்தூர்
பெற்றிருப்பார்களேயாகில் அன்றுவிரித்த அரிய அளகபாரத்தை இவ்வினை
யுடைய அடியேன் என்றைக்கு இனிமுடிப்பது எமதுகடவுளே யென்ற
ழுதாள் துரோபதி-எ-று. (௬௫)

தண்டிருந்ததவன்கரத்திற் றனுவிருந்ததிவன்கரத்தில் *
வண்டிருந்தபூங்குழன்மேன் மாசிருந்த தெனவிருந்தாள்
கண்டிருந்தீரெல்லீருங் கருதலர்பாலூர்வேண்டி....... ...*
யுண்டிருந்துவாழ்வதற்கே யுணர்கின்றீருரையீரோ... ...*

[எ-து] அந்த வீமசேனன்கையில் தண்டாயுதமிருந்தது இந்த அர்ச்
சுனன்கையில் காண்டீபமென்னும் வில்லிருந்தது இந்த துரோபதியோ
வண்டுகள் மொய்த்திருக்கின்ற பூவையணிந்த கூந்தலின்மேல் மாசேறியி
ருந்ததெனும்படி யிருந்தனள் நீங்களெல்லோரும் பார்த்திருந்தீர்கள் சத்
துருக்களிடத்திலே ஊர்வேண்டிப் பெற்றுக்கொண்டு புசித்து உயிர்வாழ்
வதற்கு நினைக்கின்றவர்களே இதற்கு உத்தரவுசொல்லுங்களென்றார் சாத்
தகியாழ்வார்-எ-று. (௬௬)

சண்டமுகிலுருமனைய சராசரந்தன்றனக்கஞ்சி ...........*
வண்டுவரையரணாக வடமதுரைகைவிட்ட..................*
திண்டிறன்மாதவன்மதியோ திகழ்தருமன்றன்மதியோ... ...*
பண்டுமவர்க்கருத்தறிந்து பார்போய்வேண்டுவதென்றான் ...*

(எ-து) வேகத்தையுடைய பிரளயகாலத்து இடியையொத்த சராசந்
னென்னும் அரசனுக்குப்பயந்து வளப்பத்தையுடைய துவாரகையைக்
கோட்டையாகக்கொண்டு வடமதுரையென்னும் பட்டணத்தைக் கைவி
ட்டவலிய சௌரியத்தையுடைய கிருஷ்ணதேவருடைய புத்தியோ பி
ரகாசத்தையுடைய தருமபுத்திரருடைய புத்தியோ முன்னதாக அவர்களு

த்துத் தெரிந்திருந்தும்போய்ப் பூமியைவேண்டுவது என்னென்றார் சாத்தகியாழ்வார்-எ-று. (௬௭)

சாத்தகிநின்றிவையுரைப்பச் சடைக்குழலாளழுதாற்றக் *
கோத்தருமன்முதலாய குலவேந்தரைவரையும்...... *
பார்த்தருளியருள்பொழியும் பங்கயக்கண்ணெடுமாலும்... *
ஏத்தரியபெருங்கற்பி னிளையாளுக்கிவையுரைத்தான்... *

[எ-து] சாத்தகியாழ்வா ரெழுந்துநின்று இந்தவசனஞ்சொல்லச் சடைபட்ட கூந்தலையுடைய துரோபதி பிரலாபித்துப்புலம்ப அப்போது தருமபுத்திரர் முதலாகிய ஐவரையும்பார்த்தருளிக் கிருபையைப்பொழிகின்ற தாமரைக்கண்ணனாகிய கிருஷ்ணதேவரும் துதிசெய்தற்கரிய பெரிய பதிவிரதத்தையுடைய தங்கையாகிய துரோபதிக்கு இவைகளை அருளிச்செய்தார்-எ-று. (௬௮)

தொல்லாண்மைப்பாண்டவர்க்குத் தூதுபோய்மீண்டுநின் *
னல்லாயுன்பைங்கூந்த னானேமுடிக்கின்றேன்...... *
னெல்லாருங்காண வினிவிரிப்பதென்னரிய...... *
புல்லார்தமந்தப் புரமாதர்பூங்குழலே...... *

[எ-து] பழமையாகிய சௌரியத்தையுடைய பஞ்சபாண்டவர்க்காகத் தூதுபோய்வந்தபின்பே துரோபதியே உன்னுடையபெரியகூந்தலை நானே முடிப்பேன் எல்லாரும்பார்க்கும்படி இனிவிரிக்கப்படுவது எண்ணிக்கையற்ற சத்துருக்களுடைய அந்தப்புரத்திலிருக்கின்ற ஸ்திரீகளுடைய பூவையணிந்த கூந்தல்-எ-று. (௬௯)

மைக்குழலாய்கேளாய் மருவாருடற்புலத்துப்...... *
புக்குழலாகுங்கொழுவாம் போர்வாளபிமன்னன்...... *
னொக்குழலும்வெங்கோன்மைத் தொல்வேந்தர்தங்குலமு ... *
மிக்குழலுஞ்சேர முடியாதிரானென்றான்...... *

[எ-து] கரிய கூந்தலையுடைய துரோபதியே கேட்பாயாக சத்துருக்களுடைய தேகங்களாகிய வயலிலேபுகுந்து உழுதற்கு ஆகின்ற கொழுப்படையென்று சொல்லலாகும் யுத்தஞ்செய்கின்ற வாளாயுதத்தையுடைய அபிமன்னனானவன் ஒன்றாகக்கூடி யுழலுகின்ற கொடுங்கோலின் றன்மையையுடைய பழைய அரசர்களுடைய குலங்களையும் உன்னுடைய அளகபாரத்தையும் ஒருங்குசேர முடியாமல் விடானென்று பின்னுஞ்சொல்லுவார் கிருஷ்ணதேவர்-எ-று. (௫௰)

துன்றுபிணியோர் துறந்தோரடங்காதோர்...... *
கன்றுசினமனத்தோர் கல்லாதவரிளையோர்...... *
ரொன்றுமுறைமை யுணராதவர்மகளிர்...... *
ரென்றுமிவர்மந்தனைத்தி லெய்தப்பெறுதாரோ...... *

(எ-து) நிறைந்த வியாதியை யுடையவர்கள், துறந்த மகத்துக்கள், ஒருவருக்கு மடங்காதவர்கள், கன்றிய கோபம்பொருந்திய மனமுடையவர்கள், கல்வியில்லாதவர்கள், சிறுபிள்ளைகள், பொருந்திய நீதியறியாதவர்கள், பெண்பிள்ளைகளென்று சொல்லுகின்ற இவர்கள் என்றும் ரகசியம்பேசுமிடத்தில் அடையப்பெறாதவர்கள்-எ-று. (௫௧)

பெண்ணீர்மைகுன்றாப் பெருந்திருவின்செங்கமலக் ...*
கண்ணீர்துடைத்தருளிக் கண்ணிற்கருணையெனுந் ...*
தெண்ணீரினாற்பொருந்தத் தேற்றினான்சாற்றுகின்ற ...*
மண்ணீரனலனிலம் வான்வடிவாமாமாயன்... ... ......*

(எ-து) பெண்கட்கு வேண்டிய சிறந்தகுணங்கள் குறைவில்லாத துரோபதியினுடைய செந்தாமரைமலர்போன்ற கண்களிலிருந்து வருகின்றநீரைத் துடைத்தருளித் தம்முடைய கண்களிலிருக்குங் கிருபையென்கிற தெளிந்த நீரினாலே பொருந்தும்படி தெளியச்செய்தார் சொல்லுகின்ற பஞ்சபூதவடிவமாகிய பெருமைபொருந்திய ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௫௨)

என்னைக்கழறி யிருந்தோனுரைதவிர்த்து... ... ....... ...*
நின்னையொப்பவரில்லாய் நீயேகெனவுரைப்ப..............*
மன்னர்க்குமன்னவன்பால் மாயோனுந்தூதாகிப்... ...*
பொன்னுற்றநேமிப் பொருபரித்தேர்மேற்கொண்டான் *

(எ-து) இப்படி உறுதியாகச் சொல்லியிருந்த கிருஷ்ணதேவருடைய வசனங்களைநீக்கி உமக்குச்சமானம் ஒருவருமில்லாத தேவரீரே தூது போகவேண்டுமென்று பஞ்சபாண்டவர்கள் சொல்ல அரசர்க்கரசனாகிய துரியோதனனிடத்திலே கிருஷ்ணதேவருந் தூதாகி மகாமேரு மலைக்குச் சமானமாகிய குதிரைகள் கட்டிய தேரின்மே லேறிக்கொண்டாரென்றவாறு. (௫௩)

சங்குமணிமுரசுஞ் சல்லரியுந்தாரைகளு.......... .......*
மெங்குமுழங்க வெழில்வெண்குடைநிழற்ற.............*
பொங்குகவரி புடையிரட்டவெண்ணிலா..................*
அங்கமொருநான்கு மவனிபருஞ்சூழ... ....... .......*

(எ-து) அப்போது சங்கவர்க்கங்களும் அழகியபேரிகைகளுஞ் சல்லரிகளும் தாரைகளும் எவ்விடத்திலும் சப்திக்க அழகிய வெள்ளைக்குடைநிழலைச்செய்ய பிரகாசம்பொருந்திய சாமரைகள் இரண்டுபக்கங்களிலும் வீசிவர கணக்கில்லாத ரதகஜதுரக பதாதிகளும் பூமியையாளும் அரசர்களும் தன்னைச் சூழ்ந்துவரப் புறப்பட்டார் கிருஷ்ணதேவரென்றவாறு. (௫௪)

கல்வரையும்பாலைக் கடுஞ்சுரமுங்கான்யாறும்............*
நல்வரையுநீர்நாடு நாளிரண்டிற்சென்றருளித்............*

தொல்வரையகோபுரமு நீண்மதிலுஞ் சூழ்ந்திலங்கும் ... *
மல்வரையதோளான் வளமாநகர்கண்டான்... ... ... *

(எ-து) மணிபாய் பருக்கைகளைக் கொண்டிருக்கின்ற பாலையென்னுங் கடியசுரங்களும் கானும் கல்லுமலைகளும் நீரையுடைய நாடுகளும் இரண்டுநாளிற் கடந்துபோய் பழமையான மலைக்கொப்பாகிய கோபுரங்களும் நெடியமதிலுஞ் சூழ்ந்து விளங்குகின்ற மல்லுத்தஞ் செய்கின்ற மலைக்குச்சமானமாகிய தோளையுடைய துரியோதனனது வளப்பத்தையுடைய பெரியநகரத்தைக்கண்டார் கிருஷ்ணதேவர்-எ-று. (௫௫)

வேறு.

தேவுசெந்துகிர்த் திரளுமாமரகதவிதமுங் ... ... *
கோவைவெண்கதிர்த் தரளமுநிரைநிரையழுத்திக் ... *
தாவும்வெம்பரித்தேரினன்றனக்கெதிர்சமைத்த ... *
காவணங்களிற்றோன்றினபச்சிளங்கமுகு ... ... *

[எ-து] அந்தமார்க்கத்திலே பசுமையும் இளமையும் பொருந்திய கமுகுகள் பழுத்தகுலையும், பச்சைக்குலையும், பாளைகளும்விளங்கியதெப்படியிருக்கிறதென்றால், சிவந்த நிறத்தையுடைய பவளங்களும், வெவ்வேறுவிதமாகிய மரகதங்களும் கோவைசெய்த வெள்ளிய கிரணத்தையுடைய முத்துக்களும் வரிசைவரிசையாகப் பதித்துத் தாவிநடக்கும் வெவ்விய குதிரைகள்கட்டிய தேரையுடைய கிருஷ்ணதேவருக்கெதிரேயுண்டாக்கிய மண்டபங்கள்போலிருந்தன வென்றவாறு. (௫௬)

வம்புலாமகிழ்சந்தனம்வருக்கைமாகந்தஞ் ... ... *
சம்பகந்தமாலம்பலதிசைதொறுந்தயங்கி ... *
யும்பர்நாயகன்வரவுகண்டுவங்களிகூர்ந்து ... *
தும்பிபாடினதோகைநின்றாடினசோலை ... ... *

[எ-து] பரிமளம்வீசிய மகிழும், சந்தனமும் பலாவும் மாவும் வாசனைபொருந்திய சண்பகமும், பச்சிலைமரமும், எந்தத் திசைகளிலும் விளங்கியிருக்கப்பெற்ற சோலையில் தேவநாயகனாகிய கிருஷ்ணதேவர் வருதலைக்கண்டு மனமகிழ்ச்சியடைந்து வண்டுகள் பாடின-மயில்கள் நின்றுநடித்தாடினவென்றவாறு. (௫௭)

அணிகொளத்தினபுரியெனுமணங்குசெந்திருவின் ... *
கணவனுக்கெதிர்காட்டுநீராசனங்கடுப்ப ... ... *
மணமிகுத்தசெந்தாமரைமலருடன்சிறந்து ... ... *
புணரியிற்பெரும்புனலையுங்கொள்வனபொய்கை ... *

[எ-து] அழகினைக்கொண்ட அஸ்தினபுரியென்னும் ஒரு கன்னிகை, மகாலட்சுமிக்கு நாயகனாகிய கிருஷ்ணதேவருக்கு எதிரே காட்டுகின்ற ஆலத்திக்கொப்பாக வாசனைமிகுந்த சிவந்த தாமரைமலருடனே சிறந்து கடல்போல்நிறைந்தநீரையுங்கொண்டிருந்தன பொய்கைகள்-எ-று. (௫௮)

நடந்தநாயகன்கோலமாய்வேலைசூழ்ஞால..................*
மிடந்தநாளினிலதுவழியாகவும்தெழுந்து..................*
படர்ந்தபாதலக்கங்கையைப்படர்மதில்சூழ்ந்து ... ... *
கிடந்ததாமெனச்சிறந்ததுதாழ்புனற்கிடங்கு......... ... *

[எ-து] தூதுநடந்த கிருஷ்ணதேவர் பூருவத்திலே வராக ரூபமாய்ச் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பேர்த்தநாளில் அதுவழியாக வந்தெழுந்து பரவியபாதாளகங்கை அந்நகரின் பெரியமதிலைவளைந்து கிடந்ததென்றுசொல்லச் சிறந்திருந்தது தாழ்ந்தநீரையுடைய அகழி-எ-று. (௪௯)

அடிநிலத்திலேபடிவனவிடிமுகிலனைத்தும்...... ... ...*
முடிநிலத்தினுக்குடுபதத்தினுமுடிவில்லை..............*
நெடியசக்கரப்பொருப்பையுநிகரிலாவிதற்கோர்.........*
படிவகுத்ததாமெனும்படிபரந்ததுபுரிசை... ... ... ...*

[எ-து] கீழ்நிலத்திலே படிவனவாகும் இடியையுடைய மேகங்களெல்லாம் அதினுடைய மேல்நிலத்துக்கு நட்சத்திர பதவியிலு முடிவில்லை நீண்ட சக்கரவாளகிரியையும் நிகரில்லாவிதற்கு ஒருபடி யொப்பாகச் செய்ததாமென்று சொல்லும்படி பரந்திருந்தது அந்த அஸ்திநபுரத்துமதிலென்றவாறு. (௫௦)

பகலினுங்கடும்பரிதிதன்கதிர்பரப்பாம..................*
லிகலியெங்கணுமெறிந்தகால்பொருதலினைத்திப் . ...*
புகலுகின்றமந்தாகினித் தரங்கமேபோல...............*
வகல்விசும்பிடைமிடைவன நெடுங்கொடியாடை.......*

(எ-து) பகற்காலத்திலும் வேகத்தையுடைய சூரியன் தன்கிரணங்களை வீசாமலிருக்கும்படி வலிமைகொண்டு எவ்விடத்தும் வீசுகின்ற காற்றுப்பொருகிறபடியால் உயர்வாகச்சொல்லுகின்றகங்கையினுடைய அலைகள்போல் அகன்ற ஆகாசத்திலிடத்திலேநெருங்குவன நெடியகொடியாகக் கட்டிய வஸ்திரங்களென்றவாறு. (௫௧)

புயங்கபூமியோ புரந்தரற்கமைத்தபொன்னுலகோ.....*
தயங்கும்செல்வநீ டளகையோநகரெனச்சாற்ற... ... ... *
வியங்குகார்முகில் வரையினின்றெழுவனபோல... ... *
வயங்குகாரகினறும்புகை யுயிர்ப்பனமாடம்........... *

(எ-து) நாகலோகமோ, இந்திரனுக்குச்செய்தபொன்மயமானதெய்வலோகமோ, விளங்காநின்ற செல்வமிகுந்த அளகாபுரியோ, இந்த நகரென்றுசொல்லச் சஞ்சரிக்கின்ற கரியமேகங்கள் மலைகளின்மேலேநின்று எழுவனபோலே பிரகாசிக்கின்ற கரிய அகிலினது நறியவாகிய புகைகளை வீசுகின்றன மாளிகைகளென்றவாறு. (௫௨)

மன்னர்வேழமுஞ்சேனையுமெதிரெதிர்மயங்கப் ...... ...*
பின்னுமுன்னுமெம்மருங்கினும்பெயரிடம்பெறுமற் ...*

றன்னிநின்றவரோகுமினோகுமினெனுஞ்சொ.............*
லென்னுமோசையேயுள்ளவீதிகளெல்லாம்.... ..... ... *

[எ-து] அரசர்களுடைய யானைகளுஞ் சேனைகளுந் ஒன்றாக்கொண்று எதிரிட்டு மயங்கப் பின்னும் முன்னும் எந்தப்பக்கத்திலும் காலைத்தூக்கிவைத்துப்போக இடம்பெறமாட்டாமல் நெருங்குகின்றவர்கள் போங்கோள் போங்கோளென்னுஞ்சொல்லினுடைய சத்தங்களையுண்டாயிருக்கின்றன வீதிகளெல்லாமென்றவாறு. (௯௧)

வரையெலாம்பலவணமெலாங்கடலெலாம்வளர்ந்த.......*
தரையெலாம்படுபொருளெலாந்தனித்தனிகுவித்த ... *
நிரையெலாங்கவராவண்ணநீர்மையைப்புலவோ.............*
ருரையெலாமெடுத்துரைப்பினுமுவமைவேறுளதோ ...*

[எ-து] மலைகளெல்லாவற்றினு முண்டாகின்ற மாணிக்கமுதலியதிரவியமும் காடுகளெல்லாவற்றினு முண்டாகின்ற சந்தனமுதலியதிரவியமும் கடல்களெல்லாவற்றினு முண்டாகின்ற சங்குமுதலியதிரவியமும் நாடுகளெல்லாவற்றினு முண்டாகின்ற செந்நெல்முதலிய திரவியமும் வெவ்வேறாகக்குவித்து வரிசையாகவைக்கப்பெற்ற கடைவீதியினுடைய குணத்தை வித்துவான்கள் கற்றசொல்லுகளெல்லா மெடுத்துச் சொன்னாலும் வேறேவுபமானமுண்டோ-எ-று. (௯௨)

விரவுகான்மலரினும்பலவீரரின்விதங்கள்...................*
பரவைவெண்மணலினும்பலபுரவியின்பந்தி ............*
யிரவில்வானமீனினும்பலயானையினீட்டம்.... ..... ... ...*
நிரைகொள்சார்த்துளியினும்பலதேரணிநிலையே ... ... *

[எ-து] காட்டிலிருக்கின்ற பலமலரைக்காட்டிலுஞ் சுத்தவீரர்களதிகமாகயிருப்பார்கள்; சமுத்திரத்தினுடைய வெள்ளை மணலைக் காட்டிலும் குதிரைப்பந்திக ளதிகமாகவிருக்கும், இராத்திரியில் ஆகாயத்திலே தோன்றும் நட்சத்திரங்களைக்காட்டிலும் யானைக்கூட்டங்க ளதிகமாகவிருக்கும்; வரிசையான மேகதாரைகளைக்காட்டிலும் இரதங்க ளதிகமாகவிருக்குமென்றவாறு. (௯௩)

ஆசிலாமறையந்தணராலயமொருபால்.................. ...*
மாசிலாமுடிமன்னவர்மாளிகையொருபால்... ... ... ...*
காசிலாமதியமைச்சர்தங்கடிமனையொருபால்.............*
பேசிலாதொழில்வணிகர்தம்பேரிடமொருபால்... ... ...*

[எ-து] குற்றமில்லாத நான்குவேதமுந்தெரிந்த பிராமணர் திருமாளிகைகள் ஒருபக்கத்திலிருக்கும் களங்கமில்லாத கிரீடந்தரித்த அரசர் அரண்மனைக ளொருபக்கத்திலிருக்கும் பழுதில்லாத புத்தியின் மிகுந்த மந்திரிகளுடைய புதுமைபொருந்திய வீடுகள் ஒருபக்கத்தி லிருக்கும் சொல்லுமிடத்தில் நிறைந்த அழகையுடைய வைசியருடைய இடமென்ற வீடுகள் ஒருபக்கத்திலிருக்கும்-எ-று. (௯௪)

மங்கலந்திகழ்மனையெலாம்வலம்புரியோசை...........✻
திங்கடோய்நெடுந்தலமெலாஞ்செழுஞ்சிலம்போசை.. ✻
யங்கண்மாநகரனைத்துமும்முரசதிரோசை... ... ......✻
யெங்கணுங்கடவுளரிடந்தொறுமுழவோசை............✻

(எ-து) கல்யாணஞ்செய்கின்ற வீடுகளெல்லாம் வலம்புரியென்னுஞ் சங்கத் தொனியா யிருக்கும், சந்திரன் தோய்கின்ற நெடிய நிலாத்தலமெங் கமெல்லாம் நடனஞ் செய்கின்ற மாதருடைய செழுமைபொருந்திய சி லம்போசையா யிருக்கும், அழகிய இடத்தை யுடைய மகத்தாகிய நகர முழுதும் வெற்றிமுரசு வீரமுரசு தியாகமுரசென்னும் மூவிதப் பேரிகை யோசையாயிருக்கும்; எவ்விடத்திலுந் தேவாலயந்தோறு மத்தள வோ சையாயிருக்கும்-எ-று. (௧௭)

மூன்றிலின்கணின் றிடப்பெறுவாசர்மாமுடிக...... ...✻
ளொன்றொடொன்றுறைந்தெற்றியேயொளிபொறிசிதறி ✻
சென்றுசென்றுறு திசைதொறுந்திகழ்ந்ததுசெம்பொற் ✻
குன்றெனும்படிநின்றது குருகுலன்கோயில்........ ...✻

(எ-து) தெருவாசலிலே நிற்க இடம்பெறாமல் "அரசருடைய கிரீட ங்கள் ஒன்றோடொன்று தேய்ந்தும் இடிபட்டும் மேலே பிரகாசிக்கின்ற அபரஞ்சுப்பொடிகள் தெறித்துப்போய் பொருந்துகின்ற திக்குகள்தோ றும் விளங்கியது மகாமேருமலை யென்னும்படி நின்றது துரியோதனன் அரண்மனை-எ-று. (௧௮)

என்றிசைக்குநல்லொளிநிமிரொழின்மணிமகுடக் ... ...✻
குன்றிசைக்கும்வன்கோபுரநீலனகர்குறுகித்...... ......✻
தென்றிசைக்குளிர்சண்பகமலர்தொறுஞ்சிறுதே.... ✻
நின்றிசைக்கும்வன்சோலைவாயமர்ந்தனனெடுமால் ... ✻

(எ-து) சூரியனெனச்சொல்லுகின்ற பிரகாசமுயர்ந்த அழகியரத்தங் கள்பதித்த சிகரங்களையுடைய மலையென்றுசொல்லுகின்ற வளத்தைப் பெற்ற கோபுரத்தையுடைய நெடிய அஸ்திநாபுரத்திற்சேர்ந்து அதற்குத் தென்றிசையில் குளிர்ச்சிபொருந்திய சண்பகமலர்கள்தோறுஞ் சிறியவ ண்டுகளிருந்து பாடுகின்ற வளப்பம்பொருந்திய சோலையினிடத்திலே எ ழுந்தருளினார் கிருஷ்ணதேவர்-எ-று. (௧௯)

அன்றுதூதுகொண்டிலங்கைதீவிளைத்தவனவர்க்... ...✻
கின்றுதூதுவந்தெயிற்புறத்திருந்தனனென்னத்...... ...✻
துன்றுதாதளிமுரல்பசுந்தெரியலான்றனக்கு ... ...✻
சென்றுதூதுவரியம்பினர்சேவடிவணங்கி...............✻

(எ-து) முற்காலத்திலே ஒருகுரங்கைத் தூதாகவிடுத்து இலங்காபு ரியை அக்கினிமூட்டுவித்தவர் பஞ்சபாண்டவர்க்காக இன்று தூதாகவந் து மதிற்புறத்துச் சோலையிலிருந்தாரென்று நெருங்கிய மலரினிடத்துவ

ண்டுகள்பாடுகின்ற பசியமலர்மாலையணிந்த துரியோதனராசனுக்குத் தூ துவர்போய் சிவந்தபாதங்களைவணங்கிச்சொன்னார்கள்-எ-று. (௭௰)

தொல்லைநாயகன்வந்தனனென்னனுஞ்சுரும்பார் ... ... *
மல்லன்மாலையானவனைமாநகர்மாக்க..... ... .......*
ளெல்லைநீண்மதில்வட்டம்யோசனையெழுநூறு........*
செல்லுமாநகர்த்தெருவினையொப்பனைசெய்தார் ... ... *

(எ-து) ஆதிநாயகனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவர் தூதுவந்தாரென்றுசொ ன்னமாத்திரத்திலே வண்டுகள்நிறைந்த வளத்தையுடைய மாலையணிந்த மார்பனான துரியோதனராஜனது ஏவுதலினாலே நகரத்தாகிய அஸ்தினாபுர த்திலுள்ளவர்கள் விருத்தமாகிய நெடிய எழுநூறுயோசனை யளவு செல் லுகின்ற பெரியபட்டணவீதிகளை அலங்காரஞ்செய்தார்கள்-எ-று. (௭௧)

மின்னுமாமுகில்பல்லிய விதங்களின்முன்முழங்க ... ... *
மன்னர்மன்னவனெழுந்தனன் மாலெதிர்வருவா........*
னென்னநீயெழுந்தெதிர் செல்வதென்றுதன்மருகன்......*
றன்னையன்பொடு தகைந்தனன் கொடுமைகூர்சகுனி ...*

(எ-து) மின்னுதல்செய்யும் பெரியமேகங்களைப் போலும் நானா விதவாத்தியங்களுமுழங்க அரசர்க்கரசனாகிய துரியோதனன் கிருஷ்ண தேவனை எதிர்கொள்ளவெழுந்தான் அதுகண்டு தூதுவருகிறவர்களை எதி ர்கொள்வது என்னமரியாதையென்று தன்மருமகனாகிய அந்தத்துரியோ தனராசனை அன்பினாலே தடுத்துவிட்டான் கொடுமைமிகுந்துள்ளசகுனி யானவன்-எ-று, (௭௨)

சீர்வலம்புரிதிகிரிசேர் செங்கையான்றனக்குக் ... .......*
கார்வலம்புரிக்கோயிலுங் காட்சியுமமைத்துப்... ... ...*
போர்வலம்புரியரசருங் கிளைஞரும்போற்றத்...........*
தார்வலம்புரித்தோளின னிருந்தனன்றவிசில்..........*

(எ-து) சிறப்புமிகுந்த சங்குசக்கரமுஞ் சேர்ந்த சிவந்த திருக்கரங் களுடைய கிருஷ்ணதேவருக்கு மேகங்கள் வலஞ்செய்யப்பெற்ற அரண் மனையும் காணத்தக்க பொருள்களும் பொருந்தச்செய்து யுத்தத்திலே வலிமைபெற்ற ராசவர்க்கமும் பந்துக்களும் வணங்க நந்தியாவர்த்த மா லையணிந்த புயத்தையுடைய துரியோதனராசன் சிங்காசனத்தி லிருந்தா னென்றவாறு. (௭௩)

தொல்பகீரதிமைந்தனுந் துரோணனுஞ்சுதனும் ... ...*
வில்விதூரனுங்கிருபனு முதலியவேந்தர்...... .........*
மல்குழுவிருபத்து நாலாயிரமகிபர்........................*
செல்வநாயகர்க்கியோசனை யிரண்டெதிர்சென்றார்......*

(எ-து) அப்போது நெடுங்காலமாயிருக்கின்ற கங்காபுத்திரனாகிய வீ ஷ்மாசாரியரும் துரோணாசாரியரும் அசுவத்தாமாவும் வில்லிலே வல்லவ

னை விதுரராசனும் கிருபாசாரியரும் இவர்கள்முதலிய அரசர்களும் நெருங்கிய அறுபத்துநூறுயிர மன்னமண்டலீகரும் கிருஷ்ணதேவனை இரண்டுயோசனை தூரத்திலேபோய் எதிர்கொண்டார்கள்-எ-று. (எச)

வந்துவந்திருமருங்கினு மன்னவர்வணங்கப்............ ✻
பைந்துழாய்முடிப் பரமனுங்கண்மலர்பரப்பி... ... ...✻
யந்தமாநகர்புகுந்தபி னரசினிம்புகாமல்... ...... ......✻
புந்திகூருருள்விதுரன் வாழ்வள்மனைபுகுந்தான்........✻

(எ-து) வந்துவந்து இரண்டுபக்கத்திலும் அரசர்கள் பணியப்பரிய துளபமாலையணிந்த கிரீடத்தையுடைய கிருஷ்ணதேவருங்கண்களைப்பார்த்துக்கிருபைசெய்து அஸ்தினபுரத்துக்கு வந்தபின்பு துரியோதனராசன் அரண்மனைக்குப்போகாமல் கிருபைமிகுந்த மனதுள்ள விதுரராசன் வாழ்கின்ற வளத்தையுடைய அரண்மனையிலே எழுந்தருளினார்-எ-று. ()

வேந்தர்யாரையும் விடைகொடுத்தகன்றபின்விமலன் ...✻
வாய்ந்தமாளிகை நடுவணோர்மண்டபங்குறுகி ... ... ...✻
யாய்ந்தவல்லவர் நவமணியழுத்தியவரியே... ... ......✻
றேந்துமாசனமிடப்பொலிந் ததன்மிசையிருந்தான் ...✻

(எ-து) எதிர்கொண்ட வரசர்களுக்கெல்லாம் செலவுகொடுத்து அவர்கள் போனபின்பு கிருஷ்ணதேவர் பொருந்திய உப்பரிகையினடுவே ஒருமண்டபத்திற்போய்ச் சிற்பங்களாய்ந்த வல்லவர்களாலே நவரத்தினமழுத்திய சிங்கந்தாங்குகின்ற ஆசனங்கொடுக்க அதன்மேல் பிரகாசத்துடனே எழுந்தருளியிருந்தார்-எ-று. (எசு)

இருந்துவந்தருளிறைவனை யிறைஞ்சினனிறைஞ்சிப் ✻
பெருந்துவந்தனைப் பிறப்பையுமிறப்பையும்பிரித்தான் ✻
மருந்துவந்தனை யமரருக்கருளியமாயோன்... ... ......✻
விருந்துவந்தனனென் றுளமுருகியவிதுரன்............✻

(எ-து) இப்படிவந்திருந்த கிருஷ்ணதேவனை வணங்கினன் வணங்கிப்பெரிய சம்பந்தமாகியசநநத்தையும் மரணத்தையும்நீங்கினன் தேவாமிர்தத்தை வந்தனைசெய்த தேவர்களுக்குத் திருப்பாற் கடலைக்கடைந்து கொடுத்தருளிய நாராயணமூர்த்தி தன்வீட்டுக்கு விருந்தாகவந்தானென்று மனமுருகிய விதுரனனவன்-எ-று. (எஎ)

கோடுகொண்டகைக் குரிசில்பாலலர்ந்தகோகனகக்... ... ... ...✻
காடுகண்டிடுவன்டெனக் கண்ணிணைகளியா........ .......✻
தோடுகொண்டதார் விதுரனிப்பிறப்பையுந்தொலைத்தான் ...✻
வீடுகண்டவர்க்கியம்பவும் வேண்டுமோவேண்டா...... ......✻

(எ-து) சங்கேந்திய திருக்கரத்தையுடைய கிருஷ்ணதேவரிடத்திலே மலர்ந்திருக்கின்ற காசரூதக யவயவமாகிய தாமரைமலர்க் காட்டைக்கண்

பொருந்தனவாகிய யானைகளுக்கும் வெவ்வியவேகத்தையுடைய காவுகின் குதிரைகளுக்கும் ஐம்பதுலக்ஷம் அரசர்களுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் தேவேந்திரனுக்கும் கிடைக்காத அமிர்தமென்று சொல்லும்படி சமைத்தென்றவாறு. (அஉ)

அமைத்தவாசனை நீர்கொடுமஞ்சனமாடிச்.............※
சமைத்தபல்கறி யடிசிறன்விருப்பினுலருந்தி...........※
யுமைக்குநாயக னிரவொழித்தருளினனுதவ.............※
இமைப்பிலாரமு தருந்தியவியல்பெனவிருந்தான் ......※

(எ-து) வாசனைகட்டிய நீரைக்கொண்டு ஸ்நானஞ்செய்து சமைக்கப்பெற்ற அநேகவிதமாகிய கறியமுதுகளையும் அன்னங்களையும் தன்னுடைய விருப்பினாற்புசித்து உமாதேவிக்கு நாயகனாகிய உருத்திரனது இரத்தலையொழித்தருளிய மகாவிஷ்ணுவானவர் கொடுக்கத்தேவர்களமிர்தத்தையுண்ட தன்மையென்று சொல்லும்படியாயிருந்தான்-எ-று. (அங)

வாசநீரும்வெண் சுண்ணமுமுறைமுறைவழங்கிப் ... ※
பூசுறுந்தொழிற் பூசினார்சூடினார்புனைந்தார்... ... .......※
வீசுசாமரமிரட்ட வெண்மதிக்குடைநிழற்றக்............※
கேசவன்மணிக் கேசரித்தவிசிடைக்கிளர்ந்தான் ... ...※

(எ-து) வாசனையுடைய பன்னீரும் வளத்தையுடைய பச்சைக்கருப்பூரங்களும் கிரமப்படிகொடுத்துப் பூசுகின்ற தொழிலையுடைய சந்தனமுதலியவையும் பூசினார்கள், மலர்முதலியவைகளைச் சூடினார்கள், ஆபரணமுதலியவைகளை அலங்கரித்தார்கள், வீசுகின்ற சாமரங்களிரட்ட வெள்ளிய சந்திரவட்டக்குடை நிழலைச்செய்ய கிருஷ்ணதேவரானவர் இரத்தினங்களாற் பதிக்கப்பட்ட சிங்காசனத்திலே எழுந்தருளியிருந்தானென்றவாறு. (அச)

ஞானகஞ்சுக விதுரன்வாழ்மனையினுயகனும்...........※
போனகம்பரி வுடனுகர்ந்திருந்தவப்பொழுதிற்.........※
றூனுமேருவுக் கப்புறத்தவ்வமுதருந்தப்.................※
பானுவும்பெருங் குடதிசைப்பரவையிற்படிந்தான்.....※

[எ-து] தத்துவஞானமாகிய சீராவைத்தரித்த விதுரமகாராசன் வாழ்கின்ற திருமனையில் கிருஷ்ணபகவானும் அறுசுவையுண்டியும் அன்புடனே புசித்திருந்த சமையத்திலே தானும் மேருமலைக் கப்புறத்திலிருக்கின்ற அமிர்தத்தைப்புசிக்கச் சூரியனும் பெரியமேற்றிசைக்கடலிலே மூழ்கினனென்றவாறு. (அரு)

கருதியந்தணர் யாவருந்தங்கடன்கழிப்பச்........ ......※
சுருதியென்னும்வெஞ் சாபமேலம்புகைதொடுத்துப் ...※
பருதிதன்பெரும் பகைவர்மேல்விடுத்தலிற்பாந்த......※
குருதியாமெனத் திவந்தெழச்சிவந்ததுகுடபால்.........※

(எ-து) அப்போது பிராமணர்களெல்லாரும் மாலைப்பொழுதிலே தாங்கள்செய்யும் மாலைக்கடனைக் கழிக்கநினைத்து வேதமென்கிற வெவ்விய வில்லின்மேல் நீராகிய பாணத்தைக் கையாற் றொடுத்துச் சூரியனுடைய பெரிய சத்துருக்களின்மேல் விட்டபடியால் பரவிய உதிரமென்றுசொல்லும்படியாய் மிகவுஞ்சிவந்தது மேற்றிசை-எ-று. (௬௮)

தாங்கவரிதிப் புறத்தெதிர்மலைந்தவெஞ்சமரி... ......*
ஊராங்கொள்கூர்நெடும் படைகளாலவுணர்தமுடலிற் ...*
துரங்கமேழுடைக் கடவுளிகிரணைதுளைத்த.........*
காயங்கள்போன்றன கனைகடறொறும்வளர்துகிர்க்காடு ......*

(எ-து) அலைகளையுடைய சமுத்திரத்துக் கப்புறத்தே எதிர்பொருகின்ற வெய்யயுத்தத்திலே வலிமையைக்கொண்ட கூர்மைபொருந்திய நெடிய ஆயுதங்களால் அசுரருடைய தேகத்திலே எழுகுதிரையுடைய சூரியனும் வரிசைவரிசையாகத் துளைத்தகாயங்கள்போலிருந்தன கடல்தோறும் வளர்கின்ற பவளக்காடு-எ-று. (௬௯)

நீதியிற்புகல் பகலெலாநீரமகளிர்..........................*
மீதுறத்தெழும் வெவ்வெயிற்படாவகைவிரித்துப் ...*
போதுபுக்கதன் றினம்படச்சுருக்கியபூம்பட்... ......*
டாதபத்திரம் போன்றனதாமரையடவி..................*

(எ-து) நீதியினுஞ் சொல்லுகின்ற பகற்பொழுதெல்லாம் நீரமகளிரானவர்கள் தங்கள்மேலே பட்டெழுகின்ற வெவ்விய வெயிற்படாத விதம் விரித்துப் பொழுதுபோயிற்றென்று ஒன்றாகச்சுருக்கிய அழகிய பட்டுக்குடைகள்போன்றன அங்கே மலர்ந்த தாமரைக்காடு-எ-று. (௭௰)

கலந்துமங்கல முழவுவெண்சங்கொலிகெழுங்க...... ......*
மிலைந்தபூங்குழல் வனிதையர்பெய்விளக்கெடுப்பக் ...*
கலந்ததாமரைத் தடமெலாங்குவிந்தனகண்டு... ......*
மலர்ந்ததாமரை போன்றதுமாநகர்வட்டம்..............*

(எ-து) மங்கலபேரிகைகளானவை வெள்ளிய சங்கங்களோடுங்கூடிச்சத்திக்க மலர்மாலைகளைத்தரித்த கூந்தலையுடைய மங்கையர்கள் பெய்யாகிய விளக்குகளெடுக்கக் கலந்திருக்கின்ற தாமரைமலர்கள் தடாகங்களெல்லாத்திலுங் குவிந்ததைக்கண்டு மலர்ந்திருக்கின்ற தாமரைமலரையொத்தது பெரிய அஸ்தினபுரத்தினுடைய வட்டமென்றவாறு. (௭௧)

உரகபுங்கவன் மணிமுடியொப்பனதீப....................*
மிருமருங்கினு மாயிரமாயிரமேந்த........... ..........*
வரிசுரந்தபோசனத்தழகுடனிருந்த.................. ...*
புரவலன்றனைப்புண்ணியவிதுரனும்போற்றி..........*

[எ-து] ஆதிசேடனுடைய ஆயிரமணிமுடிகளை யொப்பனவாக தீபங்களை இரண்டுபக்கத்திலு மிரண்டாயிரமேந்தச் சிங்கத்திறுஞ் சுகமாய்

பட்ட பெரிய ஆசனத்திலே அழகுடனே எழுந்தருளியிருந்த கிருஷ்ண பகவானைப் புண்ணியத்தையுடைய விதுரராசனும்வணங்கி-எ-று. (௬௰)

பொங்கராவணைபொலிவறப்போந்துபின்பொதுவர் ... *
தங்கள்பாடியில்வளர்ந்துமாமருதிடைத்தவழ்ந்து ......*
கங்கைமாநதிகால்வழிகருணையங்கடலே......... ... ...*
யிங்குநீதனித் தெழுந்தவாறுரைத்தருளென்றான்... ...*

(எ-து) பொலிவினையுடைய சேஷசயனமானது பொலிவு நீங்கவந்து பின்பு ஆயர்பாடியில்வளர்ந்து மகத்தாகிய மருதமரத்திடத்திற் றவழ்ந்து கங்காநதியானது திருவடியிலே பெருகப்பெற்ற கிருபைக்கடலே இவ்விடத்திலே நீர் தனித்தெழுந்தருளியவாறு அனுக்கிரகம்பண்ணுமென்றான் விதுரனென்றவாறு. (௬௧)

தோட்டுவந்துசந்தேனுகர்சுரும்புசூழ்தொடையாய்க் ...*
காட்டுவந்துமுன்றிரிந்துதங்கடவநாட்கழித்து......... *
நாட்டுவந்தபேரைவர்க்குநல்குருநாடு......... .........*
கேட்டுவந்தனமென்றனன்விதுரனுங்கேட்டான் ... ... *

(எ-து) பூவிதழிலேவந்து சிவந்த தேனைப்புசிக்கின்ற வண்டுகள்சூழ்ந்த மாலையையுடைய விதுரனே காட்டிலே முன்னே சந்தோஷமாய்த்திரிந்து தங்களுக்குச் செல்லவேண்டிய நாளைக்கழித்து நாட்டிலே வந்திருக்கிற பஞ்சபாண்டவர்களுக்கு நல்ல குருநாட்டைக் கேட்கவந்தோமென்று அருளிச்செய்தார் அதைவிதுரன்கேட்டான்-எ-று. (௬௨)

முழக்கினுயர்முரசுயர்த்தவன்றனக்குரிமை... ... ...*
வழக்கினலறிந்தடலரவுயர்த்தகோன்வழங்கான் ... ... *
சழக்கினல்திருதிசையினுமுரசெழச்சமரி............. *
லழக்கினலலதுளர்வனோவென்றவனுரைத்தான் ... ...*

(எ-து) சத்தத்திலுயர்ந்த முரசக்கொடியுயர்த்த தருமபுத்திரமகாராசனுக்கு உரியபாகத்தை முன்னோர்கள் வழக்கத்திலுலறிந்து வலிமையுள்ள சர்ப்பக்கொடியுயர்த்த துரியோதனன்கொடுக்கமாட்டான் குற்றமில்லாத எட்டுத்திக்கிலும் பேரிகைசத்திக்க யுத்தத்திலே கலக்கினலல்லாமல் அறிவானோவென்றுசொன்னான்விதுரராசன்-எ-று. (௬௩)

வாளைவாவியிலுகள்நெடுழவளரிளங்கமுகின்............*
பாளைவாயளிமுரன்றெழும்பழநாடுடையான்... ... ...*
நாளைவாழ்வவர்க்களித்திலனெனிலெதிர்நடந்து.........*
மூளைவாய்புகமுடிப்பம்வெம்போரெனமொழிந்தான் ... *

(எ-து) வாளைமீன்களானவை தடாகத்திற் குதித்தெழும்ப வளருகின்ற இளங்கமுகின் பாளையினிடத்திலே வண்டுகள்சத்தித்து எழுகின்றவயல்கள்சூழ்ந்த நாட்டையுடைய துரியோதனன் நாளை அவர்கள் வாழ்வை

கிய பங்கைக் கொடாமற் போனேனேயானால் எதிர்போய் முனையானதுவா யிலே புகும்படி யுத்தஞ்செய்து முடிப்பேனென்றார் கிருஷ்ணதேவர் என்றவாறு. (௧௪)

விரைந்துபாய்பரிமன்னவரிதம்படமெனினும்...........*
இரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளீயார் ... *
பரந்தபோரினிலெதிர்த்தவர்படப்படப்பகழி........ ...*
துரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம்..... *

(எ-து) சீக்கிரத்திலே தாவுகின்ற குதிரைகளையுடைய அரசர்கள் இதமுண்டாகும்படி வாடி இரந்து வேண்டிக்கொண்டாலும் பந்துக்களுக்கு ஒருபொருளையுங் கொடுக்கமாட்டார்கள்-பரவியயுத்தத்திலே எதிர்த்தவர்களெல்லாம் சாகும்படியாய்ப் பாணங்களைப் பிரயோகம்பண்ணின மாத்திரத்திலே சொன்னவைகளையெல்லாம் அவர்களுக்குக் கொடுப்பார்கள் என்றவாறு. (௧௫)

என்றுபாரினியியற்கையும்விதுரனுக்கியம்பி...........*
வென்றுபோர்செயுநேமியான்விடைகொடுத்தருளி ... *
குன்றுபோர்புயக்காவலர்கொடுந்துடிகறங்க...... ......*
மன்றலுண்டலர்ப்பாயலின்மீதுகண்வளர்ந்தான்.........*

(எ-து) இப்படியென்று உலகத்தினுடைய இயற்கையும், விதுரராசனுக்குச்சொல்லி யுத்தத்திலே ஜெயித்துவிளங்கிய சக்கரத்தையுடைய கிருஷ்ணபகவானவர் செலவுகொடுத்து மலைபோலுந்தோளையுடைய காவலர்கள் பறைகளைமுழக்க வாசனைபொருந்திய அலர்ந்த புஷ்ப சயனத்தின்மேல் நித்திரைசெய்தார்-எ-று. (௧௬)

குளிருமாமதிமுகத்தொளிர்குமுதவாய்முல்லைத் ..... *
தளவவாணகைபரப்பியசததளமலர்க்கை...... ... ...*
யளவிலேகுவித்தளியொடுமகன்றிலாமையினால் ... ...*
களிகொடோள்விலைக்கணிகையைப்போன்றதுக்கங்குல் *

(எ-து) குளிருகின்ற பெரிய சந்திரனாகிய முகத்தினிடத்தே விளங்குகின்ற செவ்வல்லியாகிய வாயையும் முல்லையரும்பாகிய ஒளியையுமுடைய பற்களையுங்காட்டித் தாமரைமலராகிய கைகளை யளவாகக்குவித்து அளியுடனே மலர்ந்திராமையினாலே களிப்பைக்கொண்ட தோளை விற்கின்ற வேசியைப்போன்றது அந்தராத்திரி-எ-று. (௧௭)

அலைந்தவாரிருட்கடல்பொருதொருபுடையண்டம் ... *
பிளந்ததாமெனக்கரும்படாம்பீறியதென்ன...... ... ...*
வளைந்தவேற்கடல்வற்றமேல்வடவையின்முகத்தீ... ...*
கிளர்ந்ததாமெனக்கிளர்ந்தனவிரவியின்கிரணம் .... ...*

(எ-து) அலையைப்பெற்ற நிறைந்த இருளாகிய சமுத்திரத்தைத் தாங்கமாட்டாமல் ஒருபக்கத்து அண்டம் பிளந்ததாமென்று சொல்லவும் கரி

யவஸ்திரங் கிழிந்தென்னவும் வளைந்திருக்கின்ற எழுசமுத்திரமும் வற்றிப்போக மேலிருக்கின்ற வடவாமுகாக்கினியானது பிரகாசித்ததென்று சொல்லவும் விளங்கின சூரியகிரணம்-எ-று. (௬௮)

இகலும்வாளரவுயர்த்தவனிருந்ததொல்பதியி ... ... ...※
லகிலநாயகனொருத்தனிடந்தவாறறிந்து... ...... ......※
மகரவாரிதியகன்றுமாமருங்குறவளைந்த........ ... ...※
திகிரிபோல்வந்தெழுந்தனிரவிகீழ்த்திசையில் ......※

(எ-து) பகைகொண்ட ஒளியையுடைய சர்ப்பக்கொடியையுயர்த்த துரியோதன னிருந்த பழைய அஸ்தினபுரத்திலே லோகநாயகராகியகிருஷ்ணபகவான் ஒப்பற்ற தனியேவந்ததுதெரிந்து மகரமீனையுடையசமுத்திரத்தைவிட்டு நீங்கிப் பக்கத்திலேவளைந்த சக்கரத்தைப்போலவந்து உதயமானன் சூரியன் கீழ்த்திசையிலென்றவாறு. (௬௯)

வேறு.

சோதிவானநதிமைந்தனும்பழையசுருதியாலுயர்துரோணனு ............※
மாதியாகவுயராசரும்படியடுத்தமன்னவரநேகரும்.........................※
நீதியாறுவகையைந்துபத்தொடறுபத்தொராயிரவர்நிருபரும் ... ... ...※
தீதிலாததிறலக்குரோணிபதினொன்றுபெற்றமிகுசேனையும்......... ... ...※

(எ-து) ஒளியையுடைய கங்காபுத்திரனாகிய பீஷ்மாச்சாரியரும், பழமையாகவுள்ள வேதத்தாலுயர்ந்த துரோணாசாரியர்முதலாக உயர்ந்த ராசாக்களும், பூமியையாளுகின்ற அனேகராசர்க்களும் நீதியையுடைய அறுபதினாலட்சத்து அறுபத்தோராயிரம் நிருபர்களும், குற்றமற்ற வலிமையையுடைய பதினோரக்குரோணியாகிய மிகுந்த சேனைகளுமென்றவாறு. (௭௰)

தொக்கவெள்கவரிபாலவட்டமிலைசொட்டவாழ்சுரிகைதுகிலுடன் ... ※
கைக்களாஞ்சிபலகொண்டுலாவிவருகன்னிமங்கையர்களனைவரும்... ...※
மிக்கவேதியர்கள்வல்லபல்கலைவிதத்திலுள்ளவர்கள்யாவரும்......... ...※
தக்கதம்பியரும்வந்துசூழவுயர்தரணிமேனிருபர்தம்பிரான்...... ... ...※

(எ-து) கூட்டமாயுள்ள வெள்ளியசாமரங்களும் ஆலவட்டங்களும் வளைதடியும் வாளும் உடைவாளும் வஸ்திரங்களும் கைகளிலே காளாஞ்சிகள்கொண்டு உலாவிவருகின்ற இளமையுள்ள மங்கையர்களனேகம்பேரும் மிகுந்த பிராமணர்களும் அனேக கலைக்கியானங்களிலே வல்லமையுடையவர்கள் யாவர்களும் தகுதியுள்ள தம்பிமார்களும் வந்து சூழ்ந்துகொண்டிருக்க உயர்ந்த பூமியிலே அரசர்க் கரசனாகிய துரியோதன னென்றவாறு.
(௭௧)

நிரைகதிர்க்கனகசீர்சுவர்ப்பவளவுத்தரத்திடைநிரைத்தவெண்.........※
பருமணிக்கிரணபுட்பராகவயிரத்துலாமிசைபரப்பிவெண்.........※
டரளவர்க்கவயிடூரியப்புதியகோமளப்பலகையைத்துமா.........※
மரகதத்தினெடுகோடிதூணிடையமைத்தமண்டபமருங்கோ ... .......※

(எ-று) வரிசையாகிய கிரணங்களையுடைய பொன்னினாற்செய்தகொ
டிபசுவரின்மேல் பவளத்தினால் உத்திரம்போட்டு அதன்மேல் வரிசையா
கப்பரப்பிய விளக்கமான பருத்த ரத்தினங்களாலும் கிரணங்களை யுடை
ய மாணிக்கங்களாலும் வச்சிரங்களாலுமாகிய தூலாம்வைத்து அதன்மே
லே வெள்ளிய முத்துவரிக்கல்லைப்பரப்பி வைடூரியத்தால் புதியனவாகி
ய அழகையுடைய பலகைகளைத்தைத்து பசுத்தாகிய மரகதத்தினாலே கோடி
தூண்களை இடையிட்டமைத்த மண்டபத்தினருகில்-எ-று. (௱௨)

முட்டநித்திலத்தடங்கரியைத்தகிரிமுகத்தாய்.................*
வட்டமெத்தைக்கொடைமத்தபீடமிசைவாசவன்கொலெனவைகினான்...*
பட்டவர்த்தனருமகுடவர்த்தனருமவந்துசேவடிபணிந்தபின்... ... ...*
விட்டபொற்றவிசின்முறைமையாவினிதிருக்கவென்றவனையேவியே ...*

(எ-று) முட்டும்படியாய் முத்தினால் வரிசையாகச்செய்த விளங்கிய
சிறந்த சிங்கமுகத்தையுடையதாய் வட்டமாகிய மெத்தையைக்கொண்டு
செய்த பீடத்தின்மேல் தேவேந்திரனைப்போலிருந்தான் - அப்போது பட்
டவர்த்தனர்களும் மகுடவர்த்தனர்களும்வந்து சிவந்தபாதத்தை வணங்
கினபின்பு வரிசையாயிட்டிருக்கின்ற பொன்னினாற்செய்த ஆசனத்தின்
மேல் கிரமப்படி யினிதாகவிருக்கக்கடவீரென்று அவர்களை யேவுதல்செ
ய் தென்றவாறு. (௱௩)

காவன்மன்னவர்முகங்கடோறுமிருகண்பரப்பியமர்கருதுவோ... ... ...*
ரேவலுன்கண்வருதூதனுமிடையனின்றுநம்மவையிலெய்தினை... ... ...*
மேலவமின்றியெதிர்சென்றுகண்டுதொழுதுறவுகூறினியுங்களூர்... ...*
தீவலஞ்செயவடர்ப்பனென்றுமனிசிறுன்முறைமைமாறினன்...... ..*

[எ-று] பூமியைக்காக்கின்ற ராசாக்களுடைய முகங்களை யெல்லாந்
தன்னுடைய இரண்டுகண்களாற்பார்த்து நம்மோடு யுத்தஞ்செய்ய நினைக்
கும் பஞ்சபாண்டவர்களுடைய ஏவலையினாலேவருகின்ற தூதனாகிய இ
டையனானவன் இன்று நம்முடைய சபையிலேவந்தால் ஒழுங்கில்லாமல்
எதிர்சென்று கண்டுவணங்கி யுறவுகொண்டாடினால் இனி உங்களூரை நெ
ருப்பு வலம்கொள்ளும்படியாய்க் கொளுத்திவிடுவேனென்று மிகவுஞ்சிறி
னன் முறைமைமாறினவனாகிய துரியோதனன்-எ-று. (௱௪)

இந்தவண்ணமுரைசெய்துமன்னருமிராசராசனுமிருக்கவே... ... .....*
நந்தவண்ணனுடன்வந்தவண்ணவொளிதங்குகண்டயிலுணர்ந்தபின் ...*
கந்தவண்ணமலர்கொண்டுகைதொழுதுகாலையிற்பலகடன்கழித்.......*
திந்தவண்ணமுனிருந்தபோனவையிலேயினிசைகொள்வேயினன் ... *

(எ-று) இந்தப்பிரகாரஞ்சொல்லி அரசர்களும் அரசர்க்கரசனாகிய
துரியோதனனு மிருக்க வெள்ளைமேனியனாகிய பலபத்திரருடனே பிறந்
த ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி பிரகாசந்தங்கிய நித்திரைதெளிந்தபின்பு வாசனை
பொருந்திய அழகியமலர்களைக்கொண்டு பூசைசெய்து காலையிலேசெய்ய

வேண்டிய கடன்களெல்லாஞ்செய்து முடித்து முன்சொன்னபிரகாரமிரு ந்த பெரிய சபைக்கெழுந்தருளினார் இசையைக்கொண்ட மூங்கிற்குழலை யுடைய கிருஷ்ணதேவர்-எ-று. (௧௫)

துன்னுகங்கைமகனுந்துரோணனொடுசுதனுநீதிபுனைவிதுரனும்... ......*
மன்னர்மன்னனையொழிந்தமன்னவரும்வந்துசேவடிவணங்கினார் ... ...*
கன்னனுந்தலைகவிழ்ந்திருந்தனகழன்றுளஞ்சகுனிகருதினன்... ... ...*
முன்னநின்றவர்களிட்டபீடமிசைமொய்துழாய்முகிலுமெய்தினன்......*

[எ-து] அச்சபையிலிருந்த பீஷ்மாசாரியரும் துரோணாசாரியரும் அசுவத்தாமாவும் நீதியைத்தரித்த விதுரராசனுந் துரியோதனனையொழி ந்த மற்ற அரசர்களும்வந்து சிவந்தபாதத்தை வணங்கினார்கள்- அப்போ து கர்ணமகாராஜனும் தலையைக்கவிழ்ந்துகொண்டிருந்தான்-சகுனியுளம ழன்று நினைந்திருந்தான்-எதிரேயிருந்தவர்களிட்ட ஆசனத்தின்மேல் நெ ருங்கிய துளபமாலையணிந்த மேகவண்ணனாகிய கிருஷ்ணதேவருமெழு ந்தருளியிருந்தார்-எ-று. (௧௬)

முன்னகங்குடைகவித்தகாளமுகின்முன்னிருந்தபின்முகங்கொடா......*
தென்னகந்தனையொழித்துநென்னலிடையிந்தமாநகரிலெய்தியும்... ... *
பொன்னகங்கொள்புயவிதுரனில்லிடைபுகுந்ததென்கொலிதுபகலென *
பன்னகந்தனையுயர்த்தகோவுமுனைபகரமாலுமெதிர்பகருவான்...... ... *

(எ-து) முன்னே கோவர்த்தனகிரியைக் குடையாகக்கவித்த கரிய மேகவண்ணரான கிருஷ்ணதேவர் எதிராகவெழுந்தருளியபின்பு முகங் கொடாமல் என்வீட்டைவிட்டு நேற்றைப்பொழுது இந்த வூரில்வந்தும், வீரலட்சுமியைக்கொண்ட புயத்தையுடைய விதுரன்வீட்டிலேபோனதெ ன்ன இதனைச்சொல்லுமென்று சர்ப்பக்கொடியுயர்த்த துரியோதனராசன் கேட்க கிருஷ்ணஸ்வாமியும் அதற்கு எதிருத்தாரஞ்சொல்லுவார்-எ-று.()

என்னினின்னிலொருபேதமில்லையிதுவென்னினின்னிலது வென்னவே,
மின்னின்முன்னிலகுவிறனெடும்படை கொள்விதுரன்வந்தெதிர்விளம்பி
னுன்னிலின்னமிளதொன்றுபஞ்சவருரைக்கவந்ததொருதூதன்யா... [ன
னின்னிலின்னடிசிலுண்டுநின்னுடன்வெறுக்கவென்னுவதுநீதியோ...*

[எ-து] என்வீடென்றும் உன்வீடென்றும் பேதமில்லை இதுஎன்வீ டு அது உன்வீடென்றுசொன்னாலும் மின்னல்போல்பிரகாசிக்கின்ற வெற் றியையுள்ள நெடியவில்லையுடைய விதுரராசன்வந்து எதிரேவிருந்துசொ ன்னான் அதல்லாமல் உன்னிடத்திலே இன்னமொருகாரியமுண்டு பஞ்ச பாண்டவர்கள் சொல்லைச் சொல்லவந்த ஒருதூதன்யான் உன்னிடத்தில் இனிமையுள்ள அன்னத்தையுண்டு உன்னோடுதானே வெறுக்கநினைப்பது நீதியோவென்றார் கிருஷ்ணஸ்வாமி-எ-று. (௧௮)

அரவமல்கியபதாகையாய்மதியமைச்சராயரசழிப்பினும்......... ... ...*
குரவர்நல்லுரைமறுக்கினும்பிறர்புரிந்தநன்றியதுசொல்லினும்... ... ...*

து நாள்தோறும் புகழ்ச்சிசெய்வார்கள்-அப்படியல்லவென்று மறுத்தியே யானல் அது தருமமும் சௌரியமும் கீர்த்தியுமல்ல-எ-று. (௱௰௨)

என்றுகேசவகனியம்பவெங்கெதிரிராஜராஜனுமியம்புவா........ ......*
ளன்றுசூதுபொருதுரிமையாவையுமிழந்துபோயினர்களைவருக்........*
கின்றுநீவிரகின்மீளவுங்கவரவெவ்வனிலவரிலெளியனோ...... ... ...*
சென்றுகாலவரின்னமுந்திரிவதுறுதியென்றுரைசீறியே........ ... ...*

[எ-து] இப்படியென்று ஸ்ரீகிருஷ்ணதேவரானவர்சொல்ல அங்கே எதிரே ராசாதிராசனாகிய துரியோதனராசன்சொல்லுவான் அன்றுசூதாடித் தங்களுரிமையெல்லாம் இழந்துபோனவர்களாகிய பஞ்சபாண்டவர்களுக்கு இன்று நீர் உபாயத்தினாலே மறுபடியுங் கிரகிக்கநினைத்தால் அவர்களைப்போல நானும் எளியவனோ அவர்கள் காட்டுக்குப்போய் இன்னமுந் திரிவது உறுதியென்று மிகவுஞ்சீறி-எ-று. (௱௰௩)

நீவெறுக்கிலெனிருந்தமன்னவர்திகைக்கிலென்பலநினைக்கிலென் [லென
போய்நகைக்கிலெனுரைத்தவுண்மைமொழி பொய்த்ததென்றமரர் புகலி
வேய்மலர்த்தொடையலைவரொன்னுடல் வெறுத்துவெஞ்சமர் விளைக்கிலெ
ஈயிருக்குமிடமெனினுமிப்புவியில்யானவர்க்கரசினிகொடேன்.....[ன்

(எ-து) நீவெறுத்தாலென்ன இந்தராசாக்கள் திகைத்தாலென்ன பலவாகநினைத்தாலென்ன போய்ச்சிரித்தாலென்ன சொல்லிய சத்தியவசனம் பொய்த்துப்போச்சுதென்று தேவர்கள்சொன்னாலென்ன புட்பமாலையைத்தரிக்கின்ற பஞ்சபாண்டவர் என்னுடனேவெறுத்து வெவ்விய யுத்தஞ் செய்தாலென்ன ஈயிருக்கும் அவ்வளவிடமானாலும் இந்தப்பூமியிலே யான் அவர்களுக்கு அரசாட்சி கொடுக்கமாட்டேனென்றான் துரியோதனனென் என்றவாறு. (௱௰௪)

கார்வழங்குருமெனச்சினத்தினொடுகண்ணிலான்மகலைகழறவும்........*
பார்வழங்கநினைவில்லையாகிலவர்பதிகளாயினும்வழங்குவாய்த்... ... ... *
தார்வழங்குதடமார்பனென்னவவைதாமுமன்னவன்மறுக்கவும்...... ...*
தூர்வழங்குகெனவுற்றிரந்தனனிவ்வுலகெலாமுதவுமுந்தியான் ... ......*

(எ-து) மேகம்வழங்குகின்ற இடியைப்போல் கோபத்தோடு திருதராட்டிரனுடைய பிள்ளையாகிய துரியோதனன் சொன்னபோது பூமியைக் கொடுக்க வுனக்கு மனமில்லாமற்போனால் அவர்களூர்களையாவது கொடுப்பாய் நந்தியாவர்த்த மாலையணிந்த மார்பனென்றுசொல்ல அவைகளையுந் துரியோதனன் மறுக்க ஐந்தூராவது கொடுப்பாயென்று இரப்பாகக்கேட்டார் இந்தவுலகத்தையெல்லாந் தரப்பட்ட நாபிகமலத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௱௰௫)

மாடளிக்குலநெருங்குபைந்துளபமாலையாய்மகாவேலைசூழ் ...........*
நாடளித்திடவுமைந்தபேருடையநகரளித்திடவும்வேண்டுமோ ... ... *

காடளிக்கவதனிடைத்திரிந்துழல்கரந்துபோயினர்கள்காணவோ ... *
வீடளிக்கிலும்வெறுப்பரோவதனைவிடுகவென்றெதிர்விளம்பினன் ......*

[எ-து] பக்கங்களிலே வண்டின் கூட்டங்கள் நெருங்கப்பெற்ற பசிய துளபமாலையையணிந்த கிருஷ்ணதேவரே மகாமீன்களையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த நாட்டைக்கொடுக்கவும் ஐந்துபேருடைய நகரைக் கொடுக்கவும் வேண்டுமோ காட்டைக்கொடுக்க அதிலேதிரிந்து அகப்பிழுந்துபோன பஞ்சபாண்டவர்கள் இப்போது காணும்படி ஒருவீடு கொடுத்தாலும் வெறுப்பார்களோ இதனைவிடக்கடவீரென்று எதிரேசொன்னான் துரியோதனன்-எ-று. (௱௰௧)

தந்தைதாதையுந்தன்மைகண்டிளையதாய்பயந்தவிருதம்பியர்க் .........*
கிந்தவாழ்வுமரசுங்கொடுத்தவனுநின்குலத்தொருவனிங்குளான் ......*
முந்தமானிலமனைத்திலுக்குமுயர்முறைமையாலுரியவரசருக் ... ......*
கைந்துமாநகருநீகொடாதொழியிலென்னதாகுமுனதரசியல் ... ... ...*

[எ-து] தன்னுடைய தகப்பனாராசையைத் தன்மையாய்ப் பார்த்துஞ் சிறியதாய்பெற்ற இரண்டுதம்பிகளுக்கு இந்தவாழ்வையும் அரசாட்சியுங் கொடுத்த பீஷ்மாசாரியரும் உன்குலத்திலேயொருவர் இங்கேயிருக்கின்றார் பழைமையாயுள்ள மகத்தாகிய பூமிக்கெல்லாம் உயர்ந்தமுறைமையாலே உரிமைபெற்ற பாண்டவர்க்கு ஐந்துநகரமாகிலும் நீகொடாதொழிந்தாயானால் உனதுராசாட்சி என்னவியோசனத்தையுடையதாகுமென்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௱௰௨)

ஒருகுலத்தினிலிரண்டுமன்னவருடன்பிறந்துரிமையெய்தினு ... ......*
மிருதிறத்தவருமொக்கவாழ்வுறுதலெக்குலத்திலுமியற்கையே........*
பொருகுலக்களிறுவளர்திசைக்கண்மிகுபுகழ்பரப்பிவெறுதுங் *
குருகுலத்தவரியற்கைநன்றெனமொழிந்தனன்கரியகோவலன்... ... ...*

[எ-து] ஒருகுலத்திலிரண்டு ராசாக்களுடனேபிறந்து உரிமையையடைந்தால் இரண்டுதிறத்தாரும் ஒக்கவாழ்வையடைவது எக்குலத்திலும் சுபாவமாகும் பொருகின்ற அஷ்டகெசங்கள் வளரப்பட்ட திக்குகளிடத்தில் மிகுந்தகீர்த்தியைப்பரப்பி ஏழுலோகத்தையும் பெற்ற குருகுலத்தாருடைய இயல்புநன்றாயிருக்கின்றதென்றுசொன்னார் நீலவர்ணனான கிருஷ்ணதேவர்-எ-று. (௱௰௩)

பேராரவணைதுறந்தமாயனிவைபேசவன்பினொடுபின்னையுஞ்............*
சீராரவினையுயர்த்தகோவும் விழிதீயெழும்படிசெயிர்த்துமே... .........*
பேராநிருபன்மணிநெடுஞ்சுடிகையாயிரங்கொடுபொறுத்தபார் ... ...*
வீரானவரதல்லவோவுரிமைவேண்டுமோவெனவியம்பினன்... ... ...*

(எ-து) பெரிய சர்ப்பசயனத்தைவிட்டுத் துறந்த கிருஷ்ணதேவர் இவைகளைச்சொல்ல வன்மையுடனே பின்னையுஞ் சிறந்த சர்ப்பக்கொடியையுயர்த்த துரியோதனனும் கண்கள் நெருப்பென்று சொல்லும்படி உன்

னைக்கோபித்துப் போர்செய்கின்ற சர்ப்பராசனாகிய ஆதிசேடனால் மணிகளையுடைய நெடிய ஆயிரம் உச்சியைக்கொண்டு சுமக்கப்பட்ட பூமியானது சுத்தவீரருடைய தல்லவோ அவருக்கு உரிமையும்வேண்டுமோ வென்றான்-எ-று. (௱௰௬)

பொய்வளர்ந்தமொழிமன்னன்மற்றிவை புகன்றபின்புபுயவலியினா... ...※
லவர்தங்களரசுங்கொடாமலடலாண்மைக்கொண்டெதிரடர்த்தியேல் ...※
மெய்விளங்கவருகுருநிலத்திலிடை வந்துவெஞ்சமர்விளைக்கவே ... ...※
கைவழங்குகெனவுறமதுணிவுடைய னைந்துரைக்குமிவைகாவலன் ... ...※

(எ-து) அபத்தம்பேசுகின்ற துரியோதனன் இவைசொன்னபின்பு புஜபலத்தினாலே பஞ்சபாண்டவர்களுடை இராசாங்கத்தைகொடாமல் மிகுந்தவலிமைகொண்டு யுத்தஞ்செய்வாயாகில் உண்மைவிளங்கவருகின்ற குருக்ஷேத்திரத்திலேவந்து வெவ்வியயுத்தஞ் செய்வதற்குச் சம்மதித்துக் கைகாட்டிக் கொடுவென்று கிருஷ்ணதேவர்கேட்க எதிரேயிருந்த துணிவுடையறைந்து சொல்லுவரன் துரியோதனன்-எ-று. (௱௨௰)

புன்பிறப்புடையபொதுவர்தங்களொடு புறவிலானிரைபுரந்திடு... ... ...※
முன்பிறப்புமுரலோடுகோவிய ருனைப்பிரித்ததுமறந்துநீ... ... ... ...※
மன்பிறப்பிலுயர்குருகுலத்தவர்தம் வாய்மைதானுமொருமாசிலா ... ...※
வன்பிறப்புமுணராமலோசபையி லிந்தவாசகமியம்பினாய்... ... ... ...※

[எ-து] இழிந்தபிறப்பையுடைய இடையர்களோடு காட்டினிடத்தில் பசுக்கூட்டங்களைமேய்க்கும் உம்முடையபிறப்பையும் இடைச்சிகள் உம்மை உரலுடனே கட்டியதையும் நீர்மறந்துவிட்டு இராசகுலத்திலுயர்ந்த குருகுலவரசர்களுடைய சத்தியத்தையும் ஒருகளங்கமுமில்லாத என்னுடையபிறப்பையும் அறியாமலல்லவா சபையிலே இந்தவார்த்தைசொன்னாயென்றான் துரியோதனன்-எ-று. (௱௨௧)

ஏவிலங்குசிலையவர்வந்தனுகில் யானையர்ந்தெளிதிருப்பனோ ... ... ...※
கோவிலங்குபொரவஞ்சுமோகட குஞ்சரங்கள்பகைகொண்டதால் ...※
மேவிலங்குமுன்மலர்ந்தகையறைய வேண்டுமென்பது நின்மேன்மையோ
நாவிலங்குமெனவென்னெரியோமிகவு நன்றுநன்றரசர்நியாயமே... ... ...※

[எ-து] பிரகாசிக்கின்ற அம்பையும் வில்லையுமுடைய பஞ்சபாண்டவர்கள்வந்தால் யான்வருந்தி எளிதாகவிருப்பேனோ மதம்பொழிகின்றயானைகள் பகைகொண்டதினால் சிங்கம்பொருதற்குப் பயப்படுமோ யுத்தத்துக்குவருவதானால் முன்னேகைபோட்டுக் கொடுக்கவேண்டுமென்பது உமக்குமேன்மையோ இப்படிகேட்டது என்னுடைய நாவானது தப்புமென்றுநினைத்தோ மிகவும் நல்லதுநல்லது அரசருடைய நியாயமென்றான் துரியோதனன்-எ-று. (௨௨)

அளிவருங்குழல்பிடித்துமன்னவையி லவருக்குமுரியாளைநா... ... ... ...※
வெளிவருந்துகிலுரிந்தபோதருகி ருந்துகண்டவர்களல்லவோ... ... ... ...※

துனிவரும்புனல்பருகிக்குருந்தியிடு சோறுதின்றுயிர்சுமந்துகொண் ... ...※
டொளிவரும்படியிருந்தபாவியரு மின்றுமானமிலையுள்ளவரோ ... ... ...※

(எ-து) ஐந்துபேருக்கு முரியவளாகிய துரோபதையை இராச்சபையி லே வண்டுகள்மொய்க்கின்ற கூந்தலைப்பிடித்து நான் எளிதாகத் துகிலுரிந் தபோது அருகேயிருந்து பார்க்கவர்களல்லவோ துனியாகவருகின்றநீரை விரும்பியுண்டு சோற்றைத்தின்று உயிரைச்சுமந்துகொண்டு பிரகாசமுண் டாகும்படியிருந்த பாவிகளாகிய பாண்டவர்களும் இன்று அபிமானமில் லையுடையவர்களோவென்றான் துரியோதனன்-எ-று. (௧௨௩)

அன்னையானவருமிருவராகுமனிதகைத்தவர்களாம் ... ... .....※
பின்னையானசகொடுகுருகுலத்திலைம பெறுவரோவொருபிறப்பிலர் ... ...※
பின்னையார்முடியிலவரும்பரின்ஞெடு தனித்தனிவிரும்புவார் ... ........※
என்னையாமவரொடொருகுலத்தரசனென்பதன்மையிதுவென்கொலோ.

(எ-து) மாதர்களிருவராக முன்னேபெற்ற பிதாக்களைந்துபேராம் பின்பு ஆசைகொண்டு குருகுலத்திலென்று முறைமையைப் பெறுவார்களாம் ஒருபிறப்பிலுமில்லாதவளாகிய ஒருத்தியை ஆ-ஆ கிரீடமில்லாத ஐந்து பேரும் அன்புடனே தனித்தனியிச்சிப்பார்கள் யாம் அவரோடு ஒருகுல த்துராசாக்களென்பது என்ன ஆண்மை இது என்னவென்றான் துரியோ தனன்-எ-று. (௧௨௪)

ஞாலமுற்றுமுடையன்றுணைத்திட கதைத்துவன்றுகினர்த்தும் ... ......※
மாலமுற்றுமதிவளிவினைவெனப்பெரி தறிந்துபோதவையகன்றுபோய் ... ...※
கோலமுற்றசிலைவிதுரன்வாழ்மனைபெறு கோயில்சென்றுதனிருக்கிறான். .※
சீலமற்றவர்சினந்தபோதுமொருதீதிலாதவர்செயிர்ப்பரோ. ...............※

[எ-து] உலகமுழுதையுமுடைய துரியோதனன் இதுசொல்லத்துவா ரகைக்கு அரசராகிய ஸ்ரீகிருஷ்ணதேவரும் நகைசெய்து இவனினைப்பெ ல்லாம் விஷமென்று நினைத்துப் பெரியசபையை நீங்கிப்போய் அழகிய வில்லையுடைய விதுரன்வாழ்கின்ற ஆலயமனைக்குப்போனார் நற்குணமி ல்லாதவர்கள் கோபித்தபோதிலும் ஒருகுற்றமில்லாதவர்கள் கோபிப்பா ரோ-எ-று. (௧௨௫)

கரிந்துமாலைசருகாகவும்புதிய கமலவாண்முகம்வியர்க்கவும் ...............※
இருந்துகண்ணிணைசிவக்கவுங்கொடிய செய்யவாயிதழ்துடிக்கவும் ........※
மிருந்தபேரவையினெடிதுயிர்த்திடு மிராசராசனையுறுக்கினன் ...............※
விருந்துசெய்தவுறவென்கொலென்றரச னெதிர்விதுரனைவிளம்புவான் ...※

[எ-து] அப்போது பூமாலைகள் கருகிச்சருகாகவும் புதியதாமரை மலர் போன்ற முகம்வியர்க்கவும் இருக்கமாகியகண்களிரண்டுஞ்சிவக்கவும்கொ டியசிவந்தவாயிதழ்கள் துடிக்கவும் தானிருந்தசபையிலே மிகவும் பெரு மூச்சுவிடுகின்ற இராசராசனாகிய துரியோதனனென்பவன் அந்தக்கோபால கிருஷ்ணனுக்கு இவன்விருந்துசெய்த உறவு யென்னவென்று அரசர்க்கெ திரே விதுரனைப்பேசுவான்-எ-று. (௧௨௬)

கிருஷ்ண தேவருக்கு விருந்துசெய்து உபகாரமாகினேனென்று நினைத்து என்னைநீ உதாசினம்பேசிக்கோபித்தாயே மாட்சிமையையுடைய பெரியதபோதனர்க்கும் முனிவருக்கும் முதல்வியாகிய பெரியதருமமும் கீர்த்தியும் சௌரியமும் வளர்ந்திருக்கின்ற பஞ்சபாண்டவர்க்கு உபகாரியாயில் என்னைக்கிரீடந்தரித்த அரசரானவர்கள் பழிப்பாரோவென்று பின்னுஞ் சொல்லுவான் விதுரராஜன் என்றவாறு. (௱)

சொல்லிரண்டுபகலேனினிச்சமரினின்றுவெங்கணைதொடேனென ... ... ✻
வில்லிரண்டினுமுயர்ந்தவில்லைதனைவேறிரண்டுபடவெட்டினான் ...... ... ✻
மல்லிரண்டினையுமிருவராகிமுன்மலைந்தகாளமுகில்வந்ததன் ... ... ... ✻
இல்லிரண்டுதினம்வைகுதற்குலகிலெண்ணிலாததவமெய்தினான் ...... ✻

(எ-து) இரண்டுசொற்சொல்லேன்-இனி யுத்தத்திலேநின்று வெவ்விய பாணந்தொடுத்திடேனென்று சிவன் விஷ்ணுவென்னு மிரண்டுபேர் வில்லினுமுயர்ந்த தன்னுடையவில்லை இரண்டுதுண்டாவெட்டினான் முன்னாலே கஞ்சனால்விடப்பட்ட இரண்டு மல்லரையும் பலபத்திரரும் கிருஷ்ணருமாகவந்து வென்ற மகாவிஷ்ணுவானவர் தன்வீட்டில் இரண்டுநாள் விருந்துண்டிருப்பதற்கு உலகத்தில் எண்ணில்லாத தவத்தைப் பெற்றிருந்த விதுரராஜனென்றவாறு. (௱௧)

அந்தவில்லினைமுறித்தவில்லிதனதாலயம்புகுதவச்சுதன் ............ ✻
றந்தவில்லுமரன்வில்லுமொப்பதொருதாமவில்லினைமுறிப்பதே ... ... ✻
முந்தும்வில்லியரிலென்னும்வில்லுடையவிஜயன்வந்தமரின்முடுகினு ✻
லெந்தவில்லியெதிர்நிற்கவல்லனினியென்றுகாவலரிரங்கினார் ............ ✻

(எ-து) அந்தவில்லை ஒடித்துப்போட்ட விதுரன் தன்னுடையஅரமனைக்குப்போக அப்போது மகாவிஷ்ணுவினது வில்லும் உருத்திரனது வில்லும் ஒப்பதாகிய வெற்றிமாலையை யணிந்த வில்லை முறிப்ப தென்ன வில்வீரரில் முன்னே என்னைத்தக்கவில்லையுடைய அர்ச்சுனன்வந்துயுத்தத்திலே ஆரம்பித்தால் இனி எந்தவில்லையுடையவன் அவனெதிரேநிற்கவல்லவனென்று இரங்கினார்கள் இராசாக்களெல்லாமென்றவாறு. (௱௨)

காரனைத்தும்விடுதாரையென்னபலகணைகளேவியவர்கருதும்வில் ... ... ✻
வீரனைப்பழுதுரைத்தநீபகையையெங்ஙனேதணியவெல்குவாய் ... ... ✻
பாரனைத்துமினியைவராளும்வகைபண்ணுவித்தனையழிந்ததுன் ... ... ✻
பேரனைத்துமெனவுள்ளழிந்துசிலபேசினானயர்பிதாமகன் ............ ✻

(எ-து) மேகமெல்லாம்விடப்பட்ட தாரையைப்போல அநேகபாணங்களையேவி யுத்தஞ்செய்யும்வில்லையுடைய விதுரனைப் பழுதுசொன்னாய் பகையை எப்படி அடங்கச்செய்விப்பாய் உகமெல்லாம் இனி பஞ்சபாண்டவர்களாளும்படி செய்வித்தாய் உன்பேரெல்லாம் இன்றே யழிந்ததென்று மனநொந்து சிலபேச்சுகள்பேசினார் பீஷ்மாசாரியார்-எ-று. (௱௩)

பிதாமகன்பரிவுடன்மூளிந்துசிலபேசநாசமுறுமேபசினன்........ ......※
விதாரமார்பனுயர்விதுரனல்லதுவில்வல்லவீரர்பிறரில்லையோ............※
வுதாரசிலனுயரங்கர்கோன்வரிவிலொன்றுமேயமைமயுமுழங்கெழும் ... ... ※
பதாதியோடமரிலைவரும்படமலைந்திடப்பரணிபாடவே...... ... ... ...※

(எ-து) இப்படி பீஷ்மாசாரி அன்புடனே கோபித்துச்சிலவார்த்தைகள்பேசத் துரியோதனனனவன்பார்த்து விசாலமாகிய மார்பையுடைய உயர்ந்த விதுரனல்லாமல் வில்லிலேவல்ல வீரர் பிறரொருவருமில்லையோ மிகுந்தெழுகின்ற சேனைகளோடு யுத்தத்திலே ஐவருமிறக்கும்படி யுத்தஞ்செய்யவும் பரணிபாடவும் உதாரகுணத்தையுடைய உயர்ந்த கர்னன் வில்லொன்றுமே போதுமென்றானென்றவாறு. (௱௩௪)

நீயிருக்கநெடுவிற்கைபாசிரிய னவனிருக்கறிகாற்றவன்........ ........※
சேயிருக்கவிறன்மன்னரிப்படி திரண்டிருக்கவெதிர்சென்றுநீள்...... ...※
வேயிருக்குமிதழிடைபனுக்குநல் விருந்துசெய்தவன்வெறுக்கிலென்...※
போயிருக்கிலென்முறிக்கிலென்சிலைமலைந்துநம்மொடெவர்போர்செய்வார்

(எ-து) பீஷ்மாசாரியராகிய நீயிருக்கத் துரோணாசாரியரிருக்க நிகரில்லாத அவர்குமாரன் அசுவத்தாமாவிருக்க வெற்றியையுடைய அரசர்கள் இப்படிதிரண்டிருக்க நீண்டமூங்கிற்குழலை வாயிலேவைத்து இசைபாடுகின்ற இடையனுக்கு எதிர்கொண்டுபோய் அழைத்து நல்லவிருந்திட்ட விதுரன்வெறுத்தாலென்ன போயிருந்தாலென்ன வில்லையொடித்தாலென்னவெற்றிமாலையைச்சூடி நம்மோடு ஆர்போர்செய்வார்களென்றான் துரியோதனனென்றவாறு. (௱௩௫)

என்றுகூறவிறலங்கர்பூபதியும் யானிருக்கவிசுல்விஜயனைச்..............※
சென்றுசீறியுயர்கொள்ளவல்லவர்கள் யாவரொன்றுநனிசெப்புவீர் ... ...※
கன்றினல்விளவெறிந்தகள்வனிவ னின்றுதேர்தனிகடாவினும்... ......※
அன்றுபோரினிடைகாணலாகுமென தாடல்வெஞ்சிறுணைமையே...※

(எ-து) இப்படி துரியோதனன் சொல்லக்கேட்ட கர்ணமகாராஜன் சொல்லுவான் யானொருவனிருக்கச்சே பகைகொள்ளும் அர்ச்சுனனை அடுத்துச்சீறி உயிரைக்கொள்ளவல்லவர் யாரொன்று சொல்லுவீர்கள் கன்றினாலே விளாம்பழத்தையுதிர்த்த திருடனாகியகோபாலகிருஷ்ணனேயிருந்து அவனுக்கு ரதசாரத்தியஞ் செய்தாலும் அன்று யுத்தத்திலே என்வில்லினுடைய ஆண்மையைக் காணலாமென்று பின்னுஞ் சொல்லுவானென்றவாறு. (௱௩௬)

அம்பரத்தவர்சினந்துசீறினு மொரம்பிலேயழிவர்திண்ணம்யான்........※
வெம்பணிப்பகழியேவிலாவியுடன் மீளுவானமரில்விசயனே............※
விம்பரிற்புகலவிருதளத்தினு மெனக்குநேரொருவரில்லையென்... ... ...※
றும்பர்கற்பகமுநாணவாண்மையி லுயர்ந்தவீரனிவையுரைசெய்தான்... ※

(எ-து) தேவர்கள் கோபஞ்செய்து சீறினாலும் ஒரு அஸ்திரத்தினாலே விந்துபோவார்கள் இதுசத்தியமாம் யான்வெப்பத்தையுடைய நாகாஸ்திர

த்தைத் தோளினையுடையனாலும் அர்ச்சுனன் யுத்தத்திலே உயிரோடு திரும்புவானோ இரண்டுதிறத்துச் சேனைகளிலும் இவ்வுலகத்தில் எனக்குநிகராகியவர்களொருவரு மில்லையென்று சொன்னான் தெய்வலோகத்திலிருக்கும் கற்பகவிருக்ஷமும் நாணும்படிக் கொடையிலுயர்ந்த கர்ணமகாராசனென்றவாறு. (௱௩௭)

திசையனைத்தையுமொளித்தானவனோ பிரளயத்தொருதிசையின்வாய் *
திசைபடைப்பொருதவனவாக் கரசளித்துவந்த கிழமனீர்மையான் ........ *
விசயனுக்குநிகர்நீசொலோகடவுள் வெண்மதிக்குநிகர்வெள்ளியோ ...*
அசைவில்லாத்தெருவிலும்வல்லையோ வெனவெராசைவிலாதவனரற்றினான் *

(எ-று) எட்டுத்திசையிலுஞ் சூழ்ந்துகொண்ட அரசர்களைச்சூரியனுதயமாகிய திக்கிலேகெடுகின்ற இருளைப்போல யுத்தஞ்செய்து தேவர்களுக்கு அரசுகொடுத்துவந்த வெற்றியையுடைய அர்ச்சுனனுக்கு நீ யொப்பாவையோ தெய்வத்தன்மையுள்ள வெள்ளியாகிய சந்திரனுக்குச் சுக்கிரன் ஒப்பாகுமோ அசைவில்லாத வில்யுத்தத்திலும் வல்லமையுடையையோ வென்று ஒருதளர்ச்சியுமில்லாத பீஷ்மாசாரியர்சொல்லினார்-எ-று (௱௩௮)

அவன்மொழிந்தமொழிதன்செவிப்படுமளவிலுந்தழுதருந்தீ ... ...*
யிவனுடன்சிலர்படைக்கின்மற்றவர்தமிசையுமாண்மையுமியம்பியே. ...*
புவனமொன்றுபடவினிமென்றமெனுமொருவராகிலெதிர்பொரவிடாய் *
சிவனுமென்கலையையஞ்சுமென்றுமனஞ்சீறினானிரவிசிறுவனே ... ......*

(எ-று) அந்த பீஷ்மாசாரியார் சொன்னசொல் காதிலேபட்டமாத்திரத்தில் சபையிலேயிருந்து அன்னத்தையுண்டு நீர்துரியோதனனுடன் சிலபேர்படைத்தால் அவர்களுடைய கீர்த்தியையும் வல்லமையையும் எடுத்துப்பேசினீர் திரிலோகத்தாரும் ஒன்றாய்க்கூடிவந்தாலும் என்னோடெதிர்த்துப்பொருவார்களோ அறுவில்விட்டுப்பாரும் சங்கரனும்என்னுடையபாணத்துக்குப் பயப்படுவானென்று மிகவுஞ்சீறினான் சூரியன்புதல்வனான கர்ணமகாராசன்-எ-று. (௱௩௯)

இரவிமைந்தனுரைகேட்டமைந்த னெருவீரவாய்மையுரைத்திலன் ...*
பொருநர்க்குத்தமன்றுவெஞ்சமரிலென்றெழுந்துதனிபோயினன் ... *
அரவவெங்கொடியுயர்த்தகோவுமிக வாசருக்குவிடையருளினன் ... ...*
விரவுபைந்துளபமாலையான் விதுரன்மனையிலும்மதுவிளம்புவாம் ... ...*

(எ-று) அப்படிச்சொல்லிய சூரியன்புதல்வனான கர்ணனுடனே கங்காபுத்திரனான பீஷ்மாசாரியர் ஒரு வீரவார்த்தையுஞ் சொல்லவில்லை எனெனில் அன்றுவெவ்வியயுத்தத்தில் சண்டையன்னும்போதுதெரிந்துகொள்ளுவோமென்று போனான் அப்போது சர்ப்பக்கொடியுடைய துரியோதனனும் வலிமையுள்ள அரசர்களுக்கெல்லாஞ் செலவுகொடுத்து விட்டான் புண்ணியசீல துளபமாலையணிந்த கிருஷ்ணதேவர் விதுரன்அரண்மனைக்கெழுந்தருளியதைச் சொல்லுவாமென்றவாறு. (௱௪௰)

வேறு.

பொருசிலைமுறித்தவீரன் கோயிலிற்புகுந்துநேமிக்... ......*
குருசிலைவணங்கியாங்க ணிருப்பவக்குரிசினோக்கி... ... ...*
யிருசிலையுண்டென்றிந்த விருநிலத்தியம்புவில்லி.........*
யொருசிலைமுறித்தசீற்ற மென்கொலோவுரைநீயென்றான் ... *

(எ-து) விதுரமகாராஜனானவன் அரண்மனையிற்புகுந்து சக்கிராயுதத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவனைவணங்கி அங்கேயிருக்க அவர்பார்த்து இரண்டுவிற்களுண்டென்று இந்தப்பெரிய பூமியிலே சொல்லப்பட்ட வில்லில் அர்ச்சுனன் வில்லிருக்க இன்னொருவில்லை ஒடித்தகோபத்திற்குக் காரணம்யாதோ சொல்லென்றார்-எ-று. (௩௪௧)

ஆவதுகருதானாகி லமைச்சர்சொற்கேளானாகி...... ...... ...*
வீவதுகுறியானாகில் விளைவதுணரானாகில்... ...... ... ...*
நாவதுகாவானாகில்வழக்கா டடைந்துபோரிற்..... ...... ......*
சாவதுபழுதென்றல்லோ சகத்துளார்சாற்றுகின்றார்........*

(எ-து) ஒருவன்தனக்கு ஆகவேண்டிய காரியத்தை நினையானாகில் மந்திரிகள் வார்த்தையைக் கேளானாகில் கெடுவது நினையானாகில் விளைவதை யறியானாகில் நாவைக்காப்பாற்றானாகில் அவனுக்காகப்போய்யுத்தத்திற்சாவதுபழுதென்றல்லவா பூலோகத்திலுள்ளவர்கள் சொல்லுகிறார்கள்-எ-று ( )

செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமுஞ்சிறிதுபேணார்......... ...*
சொல்வனவறிந்துசொல்லார் சுற்றமுந்துணையுநோக்கார்.....*
வெல்வதேநினைவதல்லால் வெம்பகைவலிதென்றெண்ணார் ...*
வல்வினைவிளைவுமோரார் மண்ணின்மேல்வாழுமாந்தர் ... ...*

எ-து) செல்வம்வந்து சேர்ந்தகாலத்தில் தெய்வத்தையும் கொஞ்ச வணங்கார் சொல்லவேண்டியனவைகளை அறிந்துசொல்லமாட்டார்ப வையுஞ் சிநேகிதரையும்பாரார்கள் செயிக்கிறதே நினைக்கிறதல்லாமல் ப் பகைவர் வலிமையுடையவரென்று நினையார் தீவினைவிளைவதும் பூமியிலேவாழ்கின்ற மனிதரென்றான் விதுரராசன்-எ-று. (௩௪௩)

னைக்கவுந்தொழவுமெட்டா நீயெழுந்தருளப்பெற்றும்... ...*
னக்கிதுதகுதியென்று தமருடன்வாழவெண்ணான்.......*
னக்கடுங்கனலொன்றன் மதத்தினாலுரைத்தபுன்சொல்.......*
னக்கிசையாமையாலு மிருஞ்சிலையிறுத்ததென்றான் ......*

து) நினைக்கவுந்தொழவும் எட்டாதநீரே பிரத்தியட்சத்தில் எழுந்த பெற்றிருந்தும் தனக்கு இதுதக்கதென்று ஞாதிகளுடன்வாழ்தற்கு சியான் மனத்திலிருக்கும் கோபாக்கினியையுடைய துரியோதனன் னுஞ்சொல்லிய அற்பவார்த்தை எனக்குப்பொருந்தாமல் யானும் வில்லை ஒடித்தேனென்றான் விதுரராசன்-எ-று. (௩௪௪)

மாயனுமகிழ்ந்துநோக்கி மாசுணமுயர்த்தகோமான்... ... ...*
போயருஞ்சேனையோடும் போர்க்களங்குறுகும்போது ... ...*
நீயவனருகினில்லா தொழியிலுன்னேயமைந்தர்... ...... ...*
தாயமுஞ்செல்வமுமற்றுந் தரணியும்பெறுவரொன்றான். ... ...*

(எ-து) அப்போது ஸ்ரீகிருஷ்ணதேவர் மகிழ்ந்து விதுரனைப்பார்த்து துரியோதனன் சேனையுடனே யுத்தகளத்துக்கு வரும்போது நீ அவனிடத்திலில்லாமல் நீங்கினால் உன்னுடைய நேயத்தையுடைய குந்திமாதேவி புத்திரராகிய பாண்டவர்கள் தங்கள் பங்கும் பாக்கியமும் பூமியும்பெறுவார்களென்றார்-எ-று. (௩௪௫)

ஏற்றியநறுநெய்வீசி யிந்தனமடுக்கினாலும்..... ..... .....*
காற்றுவந்துறாதபோது கடுங்கனல்கதுவாதன்றோ.... ......*
நீற்றணிநிமலனன்ன நின்கைவில்லிற்றதாகிற்...............*
சீற்றவேலரசன்சேனை தென்புலமடைதறிண்ணம்..... .....*

[எ-து] அதிகமாகிய நல்லநெய்யைவிட்டு விறகையடுக்கினாலுங் காற்று வந்து சேராதபோது கடிய அக்கினிமூளாததல்லவா பரமசிவனுக்குச்சமானமாகிய உன்கைவில் லொடிந்ததானால் கோபத்தையுடைய வேலாயுதமேந்திய துரியோதனன் சேனைகள் யமலோகத்தையுடைவது சத்திமென்றவாறு. (௩௪௬)

பன்னியபனுவல்கேள்விப் பயனுகர்மனத்தினானை..... .....*
மன்னவன்மொழிந்தவெல்லாம் பொருத்தியென் றருளிமாயோ
அங்கர்தன்னில்வண்மை யழகருளாண்மைபேசுங் ... ...[ன்
கன்னனைப்பயந்தகாதற் கன்னிதன்கோயில்புக்கான்... ... ...*

(எ-து) பன்னப்பட்ட நூல்களின் கேள்விப்பயன் அறிந்தமனமுடைய விதுரராசனைத் துரியோதனன்சொல்லிய பேச்செல்லாம் பொறுக்கக்கடவையென்றுசொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர் அங்கரத்திலே கொடையையும் அழகையும் அருளையும் ஆண்மையையுமுடைய கர்ணனைப்பெற்ற ஆசையுள்ள குந்திமாதேவியினுடைய வீட்டுக்குப்போனார்-எ-று. (௩௪௭)

மண்டலமதியமன்ன மாசறுமுகத்தினாளும்.............. ...*
திண்டிறன்மருகன்றன்னைச் சென்றெதிர்கொண்டுகண்டு... ...*
வெண்டிரைமகரவேலை விரிபுனன்முகந்தெழுந்தோன்றுங்.........*
கொண்டலைமகிழ்ந்துகாணுங் குளிர்பசுந்தோகைபோன்றாள்.*

(எ-து) பூலோக சந்திரன்போல் குற்றமற்ற முகத்தையுடைய குந்திமாதேவியும் மிகுந்தவலிமையுள்ள மருமகனாகிய கிருஷ்ணனை எதிர்கொண்டுவெள்ளிய அலைகளையும் மகரமீன்களையுமுடைய சமுத்திரத்தினது விரிந்தஜலத்தையுண்டு வருகின்றமேகத்தை மகிழ்ந்துபார்க்கின்ற குளிர்ந்த பசியமயிலையொத்தாள்-எ-று. (௩௪௮)

வேறு.

பொருசிலைமுறித்தவீரன் கோயிலிற்புகுந்துநேமிக்... ......*
குருசிலைவணங்கியாங்க ணிருப்பவக்குரிசினோக்கி... ... ...*
யிருசிலையுண்டென்றிந்த விருநிலத்தியம்புவில்லி... ... ......*
லொருசிலைமுறித்தசீற்ற மென்கொலோவுரைநீயெனறான் ... *

(எ-து) விதுரமகாராஜனனவன் அரண்மனையிற்புகுந்து சக்கிராயுதத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவனைவணங்கி அங்கேயிருக்க அவர்பார்த்து இரண்டுவிற்களுண்டென்று இந்தப்பெரிய பூமியிலே சொல்லப்பட்ட வில்லில் அர்ச்சுனன் வில்லிருக்க இன்னொருவில்லை ஒடித்தகோபத்திற்குக் காரணம்யாதோ சொல்லென்றார்-எ-று. (௱சக)

ஆவதுகருதானகி லமைச்சர்சொற்கேளானகி... ... ... ...*
லீவதுகுறியானகில் விளைவதுணரானகில்... ... ... ... ...*
நாவதுகாவானகிலவனுக்கா டடந்துபோர்ற்... ... ... ......*
சாவதுபழுதென்றல்ல சகத்துளார்சாற்றுகின்றார்... ... ...*

(எ-து) ஒருவன்தனக்கு ஆகவேண்டிய காரியத்தை நினையானகில் மந்திரிகள் வார்த்தையைக் கேளானகில் கெடுவது நினையானகில் விளைவதை யறியானகில் நாவைக்காப்பாற்றானகில் அவனுக்காகப்போய் யுத்தத்திற்சாவதுபழுதென்றல்லவா பூலோகத்திலுள்ளவர்கள் சொல்லுகிறார்கள்-எ-று()

செல்வம்வந்துற்றகாலைத் தெய்வமுஞ்சிறிதுபேணார்... ... ...*
சொல்வனவறிந்துசொல்லார் சுற்றமுந்துணையுநோக்கார்... ...*
வெல்வதேநினைவதல்லால் வெம்பகைவலிதென்றெண்ணார் ...*
வல்வினைவிளைவுமோரார் மண்ணின்மேல்வாழுமாந்தர் ... ...*

(எ-து) செல்வம்வந்து சேர்ந்தகாலத்தில் தெய்வத்தையும் கொஞ்சமாவதுவணங்கார் சொல்லவேண்டியவைகளை அறிந்துசொல்லமாட்டார்பந்துவையுஞ் சிநேகிதரையும்பாரார்கள் செயிக்கிறதே நினைக்கிறதல்லாமல் நமக்குப் பகைவர் வலிமையுடையவரென்று நினையார் தீவினைவிளைவதும் பாரார் பூமியிலேவாழ்கின்ற மனிதரென்றான் விதுராசன்-எ-று. (௱சரு)

நினைக்கவுந்தொழவுமெட்டா நீயெழுந்தருளப்பெற்றும்... ...*
தனக்கிதுதகுதியென்று தமருடன்வாழவெண்ணான்... ... ...*
மனக்கடுங்கனலினன்றன் மதத்தினலுரைத்தபுன்சொல்... ... ...*
எனக்கிசையாமல்யானு மிருஞ்சிலையிறுத்ததென்றான ... ...*

(எ-து) நினைக்கவுந்தொழவும் எட்டாதநீரோ பிரத்தியட்சத்தில் எழுந்தருளப்பெற்றிருந்தும் தனக்கு இதுதக்கதென்று ஞாதிகளுடன்வாழ்தற்கு ஆலோசியான் மனத்திலிருக்கும் கோபாக்கினியையுடைய துரியோதனன் கர்வத்தினற்சொல்லிய அற்பவார்த்தை எனக்குப்பொருந்தாமல் யானும் பெரியவில்லை ஒடித்தேனென்றான் விதுராசன்-எ-று. (௱சசு)

மாயனுமகிழ்ந்துநோக்கி மாசுணமுயர்த்தகோமான்... ... ...*
போயருஞ்சேனையோடும் போர்க்களங்குறுகும்போது... ...*
நீயவனருகிலில்லா தொழியிலுன்னையுமைந்தர்... ...... ...*
தாயமுஞ்செல்வமுற்றுந் தரணியும்பெறுவரென்றான். ... ...*

(எ-து) அப்போது ஸ்ரீகிருஷ்ணதேவர் மகிழ்ந்து விதுரனைப்பார்த்து துரியோதனன் சேனையுடனே யுத்தகளத்துக்கு வரும்போது நீ அவனிடத்திலில்லாமல் நீங்கினால் உன்னுடைய நேயத்தையுடைய குந்திமாதேவி புத்திரராகிய பாண்டவர்கள் தங்கள் பங்கும் பாக்கியமும் பூமியும்பெறுவார்களென்றார்-எ-று. (௱௬௫)

ஏற்றியநறுநெய்வீசி யிந்தனமடுக்கினாலும்...... ...... ......*
காற்றுவந்துறாதபோது கடுங்கனல்கதுவாதன்றோ....... ......*
நீற்றணிவிமலனன்ன நின்கைவில்லிற்றதாகிற்.................*
சீற்றவேலரசன்சேனை தென்புலமடைதறிண்ணம்....... ......*

[எ-து] அதிகமாகிய நல்லநெய்யைவிட்டு விறகையடுக்கினாலுங் காற்று வந்து சேராதபோது கடிய அக்கினிமூளாததல்லவா பரமசிவனுக்குச்சமானமாகிய உன்கைவில் லொடிந்ததானால் கோபத்தையுடைய வேலாயுதமேந்திய துரியோதனன் சேனைகள் யமலோகத்தையடைவது சத்தியமென்றவாறு. (௱௬௬)

பன்னியபனுவல்கேள்விப் பயனுகர்மனத்தினானை...... ......*
மன்னவன்மொழிந்தவெல்லாம் பொறுத்தியென் றருளிமாயோ
அங்கர்தன்னில்வண்மை யழகருளாண்மைபேசுங் ... ... [ன்
கன்னனைப்பயந்தகாதற் கன்னிதன்கோயில்புக்கான்... ... ...*

(எ-து) பன்னப்பட்ட நூல்களின் கேள்விப்பயன் அறிந்தமனமுடைய விதுரராசனைத் துரியோதனன்சொல்லிய பேச்செல்லாம் பொறுக்கக்கடவையென்றுசொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர் அங்கராத்திலே கொடையையும் அழகையும் அருளையும் ஆண்மையையுமுடைய கர்ணனைப்பெற்ற ஆசையுள்ள குந்திமாதேவியினுடைய வீட்டுக்குப்போனார்-எ-று. (௱௬௭)

மண்டலமதியமன்ன மாசறுமுகத்தினாளுந்...... ......... ...*
திண்டிறன்மருகன்றன்னைச் சென்றெதிர்கொண்டுகண்டு... ...*
வெண்டிரைமகரவேலை விரிபுனன்முகந்துதோன்றுங்......... ...*
கொண்டலைமகிழ்ந்துகாணுங் குளிர்பசுந்தோகைபோன்றாள்.*

(எ-து) பூலோக சந்திரன்போல் குற்றமற்ற முகத்தையுடைய குந்திமாதேவியும் மிகுந்தவலிமையுள்ள மருமகனாகிய கிருஷ்ணனை எதிர்கொண்டுவெள்ளிய அலைகளையும் மகரமீன்களையுமுடைய சமுத்திரத்தினது விரிந்தஜலத்தையுண்டு வருகின்றமேகத்தை மகிழ்ந்துபார்க்கின்ற குளிர்ந்த பசியமயிலையொத்தாள்-எ-று. (௱௬௮)

யானுறைமனையில்வந்த தென்னமாதவமென்றேத்திக்......*
கானுறைமைந்தர்தம்மைக் கண்டனள்போலவாகித்......*
தேனுறைதுளவினான்றன் செய்யமாமுகத்தைநோக்கி......*
வானுறைபுரிசைமூதூர் வந்ததென்னருளியென்றாள்......*

(எ-து) நானிருக்கும்படியாகிய வீட்டிலெழுந்தருளியது என்னமாதவமென்று வணங்கிக் காட்டிலேயிருக்கின்ற பிள்ளைகளைக் கண்டவள்போல் மனமகிழ்ந்து தேன்பெருகுகின்ற துளபமாலையணிந்த கிருஷ்ணருடைய திருமுகத்தைப்பார்த்து ஆகாயமளாவிய மதிலையுடைய இவ்வூருக்குவந்த காரியமென்ன அருளிச்செய்யுமென்றாள் குந்திமாதேவி-எ-று. (௱௪௯)

நின்பெரும்புதல்வர்சொல்ல நெடும்புனனாடுவேண்டி......*
வன்பணியுயர்த்தகோமான் மனக்கருத்தறியவந்தேன்......*
றென்புலவேந்தன்வெங்கட் செருத்தொழில்புரிவனென்று...*
னன்பலசொல்லிநாளை யெதிர்க்கவேயிசைந்தேனென்றான்..*

(எ-து) உன்னுடைய பெருமைபொருந்திய குமாரர்கள்சொல்லநெடிய நீர்வளத்தையுடைய நாட்டைவேண்டித் துரியோதனனுடைய உள்ளக்கருத்தையறியும்படி வந்தேன் தென்திசையி லிருக்கின்ற கூற்றுவன் உயிர்களைவிரும்பியுண்ண யுத்தஞ்செய்வதற்குச்சம்மதித்தான் அவனுடன் பல வார்த்தைகள்பேசி என்னப்ரயோசனம் நாளையுத்தஞ்செய்யும்படி சம்மதித்து வந்தேனென்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௱௫௰)

என்றலுங்குந்திசால விரங்கினளெதிர்த்தபோரில்......*
வென்றிடுவார்களாரோ விதியினாலமர்க்களத்திற்......*
பொன்றிடுவார்களாரோ வென்றுளம்புலர்ந்துநொந்தாள்......*
அன்றவடன்னைத்தேற்றி யாழியானுரைக்கலுற்றான்......*

(எ-து) இப்படியென்றுசொன்ன மாத்திரத்திலேகுந்திமாதேவிமிகவும் இரக்கமுற்றவளாய்எதிர்த்துசெய்கின்றயுத்தத்திலேசெயிப்பவர்கள் யாரோ விதியினால் யுத்தகளத்திலே இறப்பவர்கள் யாவரோவென்று மனம்வாடி வருந்துதலும் அன்று அவளுக்குத் தேறுதலைச்சொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லத்தொடங்கினார்-எ-று. (௱௫௧)

தன்மைமாறுரைக்கக்கேணின் றந்தைதன்மனையினீயுங்......*
கன்னியாயிருந்துவாழுங் காலையோர்முனிவன்வந்து......*
சொன்னமந்திரமோரைந்தி னொன்றினல்வெஞ் சுடரோன்றன்னை
முன்னினையவனுமன்று வந்துநின்முன்புநின்றான்......*

(எ-து) அந்தத்தன்மையைநான் சொல்லக்கேட்பாய் உன்தகப்பன்வீட்டிலே நீ கன்னிகையாயிருந்து வாழுங்காலத்தில் துருவாசமுனிவர்வந்து அனுக்கிரகஞ்செய்த ஐந்துமந்திரங்களில் ஒருமந்திரத்தால் சூரியனைநினைத்தாய் அவனும்வந்து நின்னெதிரே நின்றானென்றவாறு. (௱௫௨)

கதிரவனருளினாலோர் கன்னிக்கிடைக்காதல்கூர் ........ ......*
மதலையங்கொருவன்றன்னைப் பயந்தவன்வடுவென்றஞ்சி ... *
மிதவையம்பேழைதன்னிற் பொதிந்துநீவிடவப்போதங் ...*
நதியருமையலைவங்கங்கை நதியிடைப்படுத்ததன்றே............*

(எ-து) இப்படிக்குவந்த சூரியனது கிருபையினாலே ஒருகன்னைக்குமேல் உனக்கு ஆசை அதிகரிக்க அங்கேஒருபிள்ளையைப்பெற்றபின்பு குற்றமென்றுநினைத்து நீமிதக்கப்பட்ட பெட்டியிலே குழந்தையை வைத்து நீ ஆற்றிலேவிட்டாய் அப்போது அந்த ஆறுகங்கையிலே கொண்டுபோய் விட்டதென்றவாறு-எ-று. (௱௫௩)

காதலின்புதல்வன்றன்னைக் கண்ணிலாவரசன்பொற்றேர்ச் ...*
சூதன்வந்தெடுத்துக்கொண்டு சுதனெனவளர்த்தகாலை ... ...*
ஆதவனிவனையாருங் கன்னனென்றழைக்கவென்றான் ... ...*
ஓதையும்விசும்பிற்சொன்ன நாமமேதக்கதென்றான்...... ...*

(எ-து) அப்பெட்டியிலேவைத்து நதியில்விட்ட ஆசையுள்ள உன்பிள்ளையைத் திருதராட்டிரனுடைய தேர்ப்பாகன் வந்தெடுத்துக்கொண்டுபோய்ப் பிள்ளையாக வளர்த்தகாலத்தில் சூரியன் இவனை எவர்களுங் கர்ணனென்று அழையுங்களென்று சொன்னான் அவன்தகப்பனும் அசரீயாய்ச்சொல்லிய நாமதேயமே தகுதியானதென்று சொன்னானென்றவாறு. (௱௫௪)

பண்புடைக்குமரன்கற்ற படைத்தொழில்பலவுங்கண்டு......*
நண்புடையுரிமையெல்லா நல்கிமாமுடியுஞ்சூட்டி.............*
வண்பணியுயர்த்தகோமான் வாழ்வதற்களித்தான்மற்றத்...*
திண்பரித்தேர்வல்லோரி லவனையார்செயிக்கவல்லார்...... ...*

(எ-து) குணத்தையுடைய அந்தபிள்ளைகற்றிருந்த ஆயுதத்தொழில் அநேகமும்பார்த்து சிநேகிதமுடைய உரிமையை எல்லாங்கொடுத்தான் வலிமையுள்ள புரவிகள்பூட்டிய இரதங்களையுடைய அரசரில் அந்தக்கர்ணனை செயிக்கவல்லவர் யாரென்றார் கிருஷ்ணதேவரென்றவாறு. (௱௫௫)

அந்தநின்மைந்தன்றானே யருஞ்சிலைவிசயனோடு........ ... ...*
வந்தெதிர்மலையநின்றா னறமுமற்றறியமாட்டான் ...... ......*
சிந்தையிலையந்திர விதனைநீதெளியச்சொல்லிச்...............*
கொந்தவிழலங்கலானைக் கூட்டுகவிரைவினென்றான் ... ......*

(எ-து) உன்பிள்ளையாகிய அந்தக்கர்ணன் வில்லிலேவல்லவனாகிய அர்ச்சுனனோடேவந்து யுத்தஞ்செய்ய விருக்கின்றான் தனக்குத் தம்பியென்றறியான் மனத்திலிருக்குஞ் சந்தேகந்திர இச்செய்தியை நீ தெளியும்படி சொல்லிக் கர்ணனை சீக்கிரத்தில் ஒன்றாகக்கூட்டி வைப்பாயென்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௱௫௬)

தம்பியராக்குமேருந் தனித்தனியேவல்செய்ய................*
வம்பவிழலங்கலோடு மாமணிமகுடஞ்சூட்டி.... ...... ......*

யப்புவிமுழுதுநீயே யாளலாம்வருகவென்று.................. ✻
லும்பர்காவனையகையா னுனதுரைமறுத்தானுகில்...... ...... ✻

(எ-து) தம்பிமாரைந்துபேரும் வெவ்வேறு ஏவப்பணிசெய்ய வாசனை வீசுகின்ற மாலையுடனே ரத்தினம்பதித்த முடிசூட்டிக்கொண்டு பூமிமுழுதும் நீயேயாளலாம் வாவென்று சொன்னால் தெய்வலோகத்தி லிருக்கும் பஞ்சதருவுக்குச் சமானமாகிய தியாகத்தைத்தருங் கையையுடைய கர்னன்சம்மதிப்பான் அப்படி சம்மதியாமல் மறுத்தானுகிலென்றவாறு(ாருஎ)

எரியமுதருந்தக்கான் மெரித்தநாள்கன்றுபோனை... ...... ...✻
வரவினையங்கர்கோமா னுயுதமாகக்கொண்டான்............... ✻
வரிசிலைவிஜயன்றன்மேன் மறுகணைதொடுக்காவண்ண ... ...✻
மொருவரம்வேண்டுகென்று னுற்றவர்க்குறுதிசெய்வான்......✻

(எ-து) அக்கினிபொசிக்கும்படி காண்டாவனம் தகித்தநாளில் நீங்கிய சர்ப்பத்தைக் கர்னன் அம்பாக்கிக்கொண்டான் வரிந்தவில்லையுடைய அர்ச்சுனன்மேல் ஒருகணையேயன்றி மறுகணைதொடுக்காதவிதம் ஒருவரமாந்திரம்வேண்டி வாங்கிக்கொள்வாயென்றார் அடுத்தவர்களுக்கு உறுதிசெய்யும் கிருஷ்ணதேவர்-எ-று. (ாருஅ)

மன்றலந்தெரியல்வெய்யோன் மதலையென்மைந்தனென்ப ...✻
தன்றெனக்குரைத்தாயர்கி லவனுட லனுகவொட் டேன்... ...✻
சென்றுயிரொழிக்குமாறு செருவினைவிளைத்துப்பின்னை......✻
யின்றெனக்குரைத்தாயையா வென்னினைந்தென்செய்தாயே ✻

(எ-து) வாசமுள்ள மாலையணிந்த சூரியன்புதல்வனுகிய கர்னன் என்பிள்ளையென்பது அன்றே யெனக்குச்சொன்னீராகில் அந்த சூரியோர்தனனுடனே சேரவொட்டேன் யுத்தகளத்துக்குப்போய் உயிரை ஒழிக்கும்படியுத்தத்தைமூட்டிவிட்டுப் பின்பு இன்று எனக்குச்சொன்னையையனேஎன்ன நினைத்து என்னசெய்தா யென்றாள் குந்திமாதேவி-எ-று. (ாருகூ)

கான்பட்டகனலிற்பாயுங் கடுங்கணைவிலக்கவெண்ணில் ......✻
வான்பட்டபுரவித்தேரோன் மகன்படுமகவான்மைந்தன்......✻
றான்பட்டுமுடியுஞ்சென்று தடாதினியிருந்தேனுகில் ... ...✻
யான்பட்டகொடுமைநன்றென் றென்பட்டாளிரங்கிவீழ்ந்தாள்.

(எ-து) காண்டார்வனத்து அக்கினியி லிருந்துவந்த வேகத்தையுடைய சர்ப்பக்கணையைவிலக்கநினைத்தேனேயானுல்சூரியன்புதல்வனுகிய கர்னன் இறந்துவிடுவான் நான்போய் அதைவிலக்காமல் விடுவேனேயானுல் இந்திரன்புதல்வனுகிய அர்ச்சுனன்இறந்துவிடுவான் யான்படுகின்றகொடுமைநன்றாயிருக்கின்றதென்று என்னபாடுபட்டாள் இரக்கமுற்று வீழ்ந்தாள்குந்திமாதேவி-எ-று. (ாசுய)

தேக்குந்தியகிலுஞ்சாந்துஞ் சிந்துநீர்நதிருஞ்செல்வக் ... ...✻
கோக்குந்தியரசன்பாவை குலைந்தழூங்கொடுமைகண்டு .......✻

மீக்குந்தியுறிகடொறும்வெண்ணெயுந்தயிருமுண்ட... ... ...*
வாக்குந்திமலரோன்பின்னுமனத்தளர்வகற்றினனே... ... ...*

(எ-து) தேக்கு அகில் சந்தனமுதலிய மரங்களைத் தள்ளிக்கொண்டு செல்லுகின்ற நீரையுடைய சிந்துநதிசூழ்ந்த குந்திதேசத்து அரசன் புத்திரியானவள் குலைகுலைந்து அழுகின்ற கொடுமையைப்பார்த்து மேலே எட்டி உறிகளிலெல்லாம் வெண்ணெயுந்தயிரும் உண்ட வாயையும் நாபிக்கமலத்தையுமுடைய கிருஷ்ணதேவர் மறுபடியும் மனத்தளர்ச்சியைநீக்கினார்-எ-று. (௱௬௧)

பைவருந்தலைகளைந்துபடைத்தபன்னகமேபோலே...... ...*
மைவருமடிதனன்றேவங்கர்கோன்மடிதனன்றே......... ...*
உய்வருஞ்சமரிலாவியொருவர்போயொருவருய்யார்... ......*
நைவருந்துயரமாற்றிடப்பதேகருமமென்றான் ... .........*

[எ-து] படத்தையுடைய ஐந்துதலைகளைப்படைத்துள்ள ஒருசர்ப்பம்போலப் பஞ்சபாண்டவர்களும் இரத்தல்நல்லதோ அங்கதேசத்திற்கதிபதியாகிய கர்ணனொருவன் இறப்பதுநல்லதோ பிழைத்தற்கரிய யுத்தத்தில் ஐந்துபேர்களுக்குள்ளே ஒருவரிறந்து மற்றவர்க ளிருக்கமாட்டார்கள் ஆகையால் நைந்துருவருகின்ற துக்கத்தைநீக்கிக்கொண்டுபோவதே காரியமென்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௱௬௨)

காளமாமுகிலின்மேனிக்கறியநாயகனுந்தேற்றி........ ......*
மீளமாதவத்தின்மிக்கவிதுரன்வாழ்மனையினெய்த............*
வாளமால்வரையில்வெய்யோன்குறுகினன்வருணன்றிக்கி ...*
னீளமால்யானைநெற்றிநிலாத்தசெந்திலதம்போன்றே........*

[எ-து] கரியமேகவண்ணனான கிருஷ்ணனுந் தேறுதல்சொல்லி மறுபடியும் மகத்தாகிய தவத்திலேயிருந்த விதுரன்வாழ்கின்ற அரண்மனைக்குப்போக அப்போது சக்கிரவாளகிரியில் சூரியன் அஸ்தமயமானான் மேற்குதிசையிலிருக்கின்ற பெரியயானையினுடைய நெற்றியிலிட்ட சிந்தூரப்பொட்டுபோல்-எ-று. (௱௬௩)

நாற்றிசையுலகுதன்னினான்மறையுணர்ந்தோர்யாரும்........*
போற்றிசைமாலையென்னும் பொற்புடையணங்குவைக......*
மாற்றிசைவிலாதசெம்பொன் மண்டபந்தன்னிலாதி... ......*
மேற்றிசைக்கடவுளிட்ட வெய்யின்மணிபீடம்போன்றான்......*

[எ-து] நான்குதிசையுள்ள உலகத்தில் வேதப் பிராமணர்கள் யாவரும் போற்றுகின்ற கீர்த்தியையுடைய மாலைப்பொழுதென்னும் அழகுள்ள மங்கையானவளிருக்க நிகரற்ற மாற்றுள்ள செம்பொன்னாற்செய்த மண்டபத்தில் சூரியனானவன் வருணனாலிடப்பட்ட ஒளியையுடைய ரத்தினபீடத்தையொத்தானென்றவாறு. (௱௬௪)

கொண்டமென்சிறைவண்டென்னும்கொழுநருக் கிடங்கொடா
முணடகக்குலத்துமாதர்முகங்குவித்தூடிநிற்பக்... ... ...[டல்
கண்டெதிர்கொண்டகாதற்கயிரவக்கனிகைமாதர்... ...... ...*
வண்டுறைநின்றுதங்கள்வாய்மலர்ந்தழைக்கலுற்றார் ... ... ...*

(எ-து) மெல்லிய சிறகைக்கொண்ட வண்டுகளென்னும் நாயகருக்கு இடங்கொடாமல் தாமரைக்கூட்டமாகிய மங்கையர்கள் மலராகிய முகத்தைக் குவித்துக்கொண்டு கோபித்துநிற்கப்பார்த்து அல்லிகளாகிய தாசிகள் எதிர்கொண்டு வளத்தையுடைய நீர்த்துறையிலிருந்து தங்கள் வாயைத்திறந்து அழைக்கின்றார்கள்-எ-று. (௱௬௫)

காடெலாமலர்ந்தமுல்லைக் ககனமீதெழுந்ததென்ன... ... ...*
வானெலாம்வயங்குதாரைநிரைநிரைமலர்ந்துதோன்ற.........*
வேனிலான்விழவின்வைத்தவெள்ளிவெண்கும்பமென்னத்..*
தூநிலாமதியம்வந்துகுணதிசைத்தோன்றிற்றம்மா ....... ... *

(எ-து) காடெலாமலர்ந்த முல்லைகள் ஆயத்தின்மேலும் எழுந்ததென்றுசொல்லும்படி அவ்வாகாயத்தில் பிரகாசம்பொருந்திய தாரைகள் கும்புகும்பாய் பரவித்தோன்ற மன்மதனுடைய உச்சவத்தில்வைத்த வெள்ளியாற்செய்த சுவேதகும்பமென்றுசொல்லப் பரிசுத்தமாகிய கிரகத்தையுடைய சந்திரனானவன்கிழக்குத்திசையில்உதயமாயிற்றென்றவாறு(௱௬௬)

தூவியனிலவுதோன்றத்துணைவரைப்பிரிந்தோர்கண்கள்......*
காவியுமாம்பலும்பைங்கருவிளமலரும்போன்ற...............*
மேவியமகளிர்கண்கள்மீனெறிபரவையேழுந்......... ... ...*
தாவியவுழையுங்காதற்சகோரமும்போன்றமாதோ ..........*

[எ-து] பரிசுத்தமாகிய இயலையுடைய சந்திரனுதயமாகப் புருஷனை நீக்கின மங்கையருடைய கண்கள் நீலோற்பலமலரையும் அல்லிமலரையும் காக்கணமலரையும் ஒத்தனபுருஷரைக் கூடியமங்கையருடைய கண்கள்மீனைவீசுகின்ற ஏழுசமுத்திரத்தையும் தாவுகின்ற மானையும் ஆசையையுடைய சகோரபட்சியையும் ஒத்திருந்தன-எ-று. (௱௬௭)

அரவியலல்குலாருமகிளருமன்புகூர....................... ... ...*
விரவியவமளியெய்திவீதிமாநகரமெங்கும்............ ... ...*
பரவையினிமிர்ந்தவோதையமர்ந்தபின்பரித்தேர்வேந்த ... *
னிரவிடைசூழ்ந்தவண்ணமின்னதென்றியம்புகின்றாம் .......*

(எ-து) பாம்பின்படம்போலும் நிதம்பத்தையுடைய மங்கையர்களும் புருஷர்களும் அன்புசிறக்கச் சப்பிரகூட மஞ்சத்தையடைந்து வீதிகளையுடைய பட்டணமெல்லாஞ் சமுத்திரம்போல முழங்குமுழக்கம் அடங்கியபின்பு அர்த்தராத்திரியிலே துரியோதனன் ஆலோசனை செய்தவிதம் இன்னதென்று சொல்லுவோம்-எ-று. (௱௬௮)

தங்கையுந்தம்பிமாருங்கன்னனுஞ்சகுனிதானுஞ்..........*
சிங்கையிற்றெளிந்தகல்விச்செழுமதியமைச்சராமு... ......*

முந்தரவுயர்ந்தகோமானேவலால்முழுதுமெண்ணி... ... ...*
மந்திரமிருப்பான்வந்தோர்மண்டபங்குறுகினரே......... ...*

(எ-து) தகப்பனாகிய திருதராட்டிரனும் தம்பிமார்களும் கர்னனும் சகுனியும் மனதிலேயாராய்ந்து தெளிவாகவறிந்த கல்விநிறைந்த செழுமையுள்ள புத்தியையுடைய மந்திரிகளும் சர்ப்பக்கொடியுயர்ந்ததுரியோதனராஜன் ஏவலாலே முழுதும் ஆலோசனைசெய்யும்பொருட்டு ஒருமண்டபத்திலே வந்திருந்தார்கள் என்றவாறு. (ரகசு)

தீதறுமதிவல்லோரைச்செழுமதிக்குடையானோக்கிப்... ... *
பாதகவனத்திற்போனபாண்டவர்தம்மையின்று...... ... ...*
மேதகவழைத்துநாடுவேண்டுமினென்றுமூட்டும்... ... ......*
யாதவன்றனித்துவந்தானென்செய்வதியம்புமென்றான்... ... *

[எ-து] குற்றமற்ற மந்திரிகளைச் செழுமையுள்ள சந்திரவட்டக் குடையையுடைய துரியோதனன்பார்த்துக் கொடுமையாகிய காட்டுக்குப்போன பஞ்சபாண்டவரை இங்கேமேன்மையாக அழைத்து உங்கள்நாட்டைக் கேளுங்களென்று மூட்டிவிட்ட கோபாலகிருஷ்ணனானவன் தனித்துவந்தான் அதற்கு நாமென்னசெய்வது சொல்லுமென்றான்-எ-று. (ரஎ0)

பொரும்படைமைந்தன்கூறத்தந்தையும்பொருந்தச்சொல்வா,
னரும்புலிவலையிற்பட்டால்விடுவரோவெயினராமேனும்.........*
வரம்பில்வெஞ்சேனையோடும்வளைந்துநீமாயன்றன்னைக்......*
கரும்பொழுதகலுமுன்னேகொல்வதேகருமமென்றான்... ...*

[எ-து] யுத்தஞ்செய்கின்ற சேனைகளையுடைய துரியோதனன்கேட்கத் தகப்பனாகிய திருதராட்டிரனும் பொருந்தும்படி சொல்லுவான் அருமையாகிய புலியானது வலையிலேயகப்பட்டால் வேடரானவர்கள் விட்டுவிடுவார்களோ அளவில்லாத வெவ்வியசேனையோடு வளைந்துகொண்டு கோபாலகிருஷ்ணனை இராத்திரியானது நீங்குமுன்னே கொன்றுபோடுவதே நல்லகாரியமென்றான்-எ-று. (ரஎக)

கண்ணிலானுரைத்தமாற்றங்கேட்டலுங்காவலோரில்...... ...*
மண்ணிலாரிதற்குமுன்புதூதரைவளைந்துகொன்றார்... ... ...*
எண்ணிலாவிந்தவண்ணமெவ்வழிக்கேற்றதென்று...... ... *
வெண்ணிலாமுறுவல்செய்துவிகர்னனும்விளம்பலுற்றான் ...*

(எ-து) கண்ணிலாத திருதராட்டிரன் சொன்ன பேச்சைக்கேட்டவளவில் இராசாக்களில் பூமியிலே எவர்கள் இதற்குமுன்னே தூதர்களைவளைந்துகொன்றவர்கள் எண்ணிக்கையில்லாத இந்தவிதம் எந்தவழிக்கு ஏற்றதென்று வெள்ளிய நிலாவைப்போற் சிரித்துச் சொல்லத் தொடங்கினான் விகர்னன்-என்றவாறு. (ரஎஉ)

மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணியின்மிக்கோர்...... ...*
மீதாத்திரமொழிவோர்மாதர்தூதரொன்றிவரைக்கொல்ல... ....*

பார்த்திபர்தமக்குவேறுபாவமும்பிதனினில்லை...... ..........*
பூத்தெரிதொடையாய்பின்னுநரகினும்புகுவனென்றான் ... ...*

(எ-து) மூத்தவர்கள் இளையவர்கள் வேதப்பிராமணர்கள் மிகுந்த யோ யாளிகள் துதிசெய்பவர்கள் மங்கையர்கள் தூதர்களென்று சொல்லப்பட்ட இவர்களைக்கொல்லென்றால் அரசர்களுக்கு இதைவிட வேறேபாவமில்லை பூவிறுத்தெடுத்த மாலையணிந்த அரசனே அவர்கள் பின்னும நரகத்திற் புகுவரென்றவாறு. (௱எ௩)

பழியுடைப்பகைஞரேனுந்தன்பெரும்பதியில்வந்தா.........*
லெழிவுறக்கோறல்பாவமான்மையுமல்லவென்பார்...... ......*
கழிகடற்சேனைசூழக்கங்குலின்வளைந்திட்டாலு...............*
மெழிகடைக்கொண்டல்வண்ணனகப்படானெவர்க்குமென்றான்

[எ-து] பழியையுடைய சத்துருக்களானாலும் தன்னுடையபெரியவூரில் வந்தால் அழிவையடைய அவர்களைக்கொல்லுதல் பாவம் வலிமையுமல்லவென்று சொல்லுவார்கள்-மிகுந்த கடல்போன்ற சேனைகள்சூழ இராத்திரியிலே வளைந்துகொண்டாலும் அழகுபொருந்திய மேகவண்ணனானகிருஷ்ணதேவர் ஒருவருக்கும் அகப்படானென்றான் விகர்ணன்-எ-று. (௱எ௪)

வெம்புயவலியான்மாதைவிரிதுகிலுரிந்தவீரன்..............*
தம்பியைமுனிந்துசீறித்தமையனைநோக்கிச்சொல்வான் ... *
வம்பவிழலங்கன்மார்பாமந்தணமுரைக்கலுற்ற...............*
விம்பர்மற்றியாதுசொல்லவிளைஞரையழைத்ததென்றான் ... *

(எ-து) வெவ்வியபுஜபலத்தினாலே துரோபதியைத் துகிலுரிந்த துர்ச்சாதனனானவன் தம்பியைப்பார்த்துக் கோபித்துத் தமையனைப்பார்த்துச் சொல்லுவான் வாசனைபொருந்திய மாலையையணிந்தமார்பனே ரகசியம் பேசத்தொடங்கினால் இவ்விடத்திலே சிறியோர்களையழைத்தது என்ன காரியஞ்சொல்ல-எ-று. (௱எ௫)

அதிரதர்முதலாயுள்ளவவனிபர்வளைந்துநிற்ப.......... ... ...*
வெதிர்முகிறவழுங்கோயிலெரியினையெங்குமூட்டி.............*
விதூரனுமவனுஞ்சேரவெந்திடமலைவதல்லால்.................*
மதிபிறிதில்லையின்னேவல்விரைந்தெழுமினென்றான்..........*

(எ-து) அதிரதர்முதலாகிய அரசர்களெல்லாரும் சூழ்ந்துநிற்க மேகந்தவழ்கின்ற அரண்மனையிலே நெருப்பைமூட்டிவிட்டு விதூரனுங் கோபாலகிருஷ்ணனுஞ் சேரவெந்துபோகும்படி செய்வதல்லாமல் வேறே யோசனையில்லை சீக்கிரத்திற்புறப்படுமென்றான் துர்ச்சாதனன்-எ-று. (௱எ௬)

செங்கதிரொழுந்துசீறிச் செறியிருணிற்பதுண்டோ ... ...*
விங்கவளிருந்தவில்லி லெரியிடவேண்டுமோதாவ்.........*
வெங்கணையொன்றினாலே விளிந்திடவென்றமீள்வேன் .......*
கங்குலினெழுமினென்று கன்னனுங்கனன்றுசொன்னான் ... *

(எ-து) சூரியன்கிரணங்களைவீசிப் புறப்பட்டானேயாகில் உலகங்களை மூடிய இருளானது நிற்குமோ இவனிருக்க வீட்டிலே நெருப்புப்போட வேண்டுமோ வெவ்விய பாணமொன்றிலே சாகும்படிசெய்து மீள்வேன் இப்பொழுது நாளை புறப்படுங்களென்று கோபித்துச்சொன்னான் கர்ணமகாராசன்-எ-று. (௱௭௭)

படிப்பெயர்க்கேதகிலனைப் பகைவனைக்கூடுமாகில் ... ... ...*
விடிப்பமென்னாநம்மை வெஞ்சமர்வெல்லவொட்டான் ...*
மடிப்பதென்வேறுமக்கள் மாயனைமனையிற்கோலி ..........*
சடிப்பதேகருமமென்று சகுனியும்பின்னுஞ்சொல்வான் ...*

(எ-து) இந்தவூரைவிட்டுப்போய் நாளைநம்முடைய பகையாளிகளுடனே கூடுவானேயாகில் தடுக்கக்கூடாதவிடப்பயனைப்போல் நம்மைவெவ்விய யுத்தத்திலே செயிக்கவொட்டான் வேறேயோசிக்க வேண்டியதென்ன கோபாலகிருஷ்ணனை வீட்டிலேவைத்து வஞ்சிப்பதேகாரியமென்று சகுனியானவன் பின்னுஞ்சொல்லுவான்-எ-று. (௱௭௮)

கொல்லுவதியற்கையன்று குழிபரித்தரக்கரோடு...... ... ...*
மல்லரையிருத்திமேலோ ராசனம்வகுத்துநாளை... ... ...*
பெல்லிடையழைத்துவீழ்வித் தியலரும்விலங்குபூட்டித் ...*
தொல்லருஞ்சிறையில்வைத்தல் தூதருக்குரிமையென்றான் *

(எ-து) கொல்வது இயற்கையல்ல குழிவெட்டி இராட்சதர்களுடனே மல்லர்களையும் உள்ளேவைத்து மேலே ஒரு ஆசனஞ்செய்து நாளைராத்திரியிலே யழைத்து அதிலேவிழும்படிச்செய்து அரியவிலங்குபூட்டி அரிய சிறையிலேவைப்பது தூதருக்கு இயற்கையென்றுசொன்னான் சகுனியென்றவாறு. (௱௭௯)

மாதுலனுரைத்தமாற்ற மருகனுமிசைந்துகங்குல்...... ... ...*
போதிடையனேகமல்லர் பொருங்கடப்புகன்றுநாலும்...... ...*
நீதியினிருந்துதாழ நிலவறைசமைத்தபின்னை... ... ... ...*
ராதிநூறாயிரப்பே ரரக்கரையுந்துளவைத்தான்.............*

[எ-து] மாமனாகிய சகுனிசொன்னசொல்லுக்குதுரியோதனனுமிசைந்து கேட்டு ராத்திரியிலே அனேகமல்லரை வரச்சொல்லிக் காலுமிருந்து கொண்டு நிலவறையுண்டாக்கி அதிலேமுன்னே நூறாயிரம் அரக்கரைவைத்தான்-எ-று. (௱௮௰)

மல்லர்பப்பரவர்தம்மை மற்றதிரிசட்டிவைத்தான்... ... ...*
வில்லுடைவீரர்தம்மை வேறதிரிசட்டிவைத்தான்... ... ...*
பல்படைவல்லோர்தம்மைப் பதின்மடங்கதனில்வைத்தா ...*
னல்லிலோர்கடிகைதன்னி லதிபனையழைக்கவென்றே ... ...*

(எ-து) மல்லரையும் பப்பரரையும் அதற்கிரட்டிப்புவைத்தான் வில்வீரரை அதற்கிரட்டிப்புவைத்தான் ஆயுதத்திலே வல்லவர்கள் பலபேரை அ

தற்கிரட்டிப்புவைத்தான்! ஆயுதத்திலே வல்லவர்கள் பலபேரை அவரிடத்துமடங்கு அதிலேவைத்தான் ராத்திரியிலே ஒருநாழிகையில் அறிவையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரை அழைக்கவேண்டுமெனறான்-எ-று. (௱௮௧)

பெரும்பிலவறையைவேயின் பிளப்பினானிறைத்துமூடி... ...※
யரும்பெறமணிகளாலோ ராசனமதன்மேலாக்கிச்... ... ... ※
சுரும்பமாமாலை தூக்கித் தொழிலுடைவிமானமேற்றி ... ... ※
வரம்பிலாவென்றிவேலோன் மாறிலாவஞ்சனைஞ்செய்தான்......※

(எ-து) பெரியபிலத்துவாரத்தினுடைய அறையை மூங்கில்பிளப்பினால் நிறைத்து மூடிவிட்டு பெறுதற்கரிய ரத்தினங்களாலே ஒருஆசனம் அதன்மேலுண்டாக்கி வண்டுகள்மொய்க்கின்ற பூமாலைதொங்கக்கட்டிச் சித்திர விமானமொன்று மேலேவைத்து அனேகம்வெற்றியைத்தரித்த வேலையுடைய துரியோதனன் மாறுபாடுதெரியாதவிதஞ் செய்தான்-எ-று (௱௮௨)

அடியவர்மனத்திலுள்ள வாரிருட்கங்குறீர்க்கு... ...... ......※
நெடியவனிருக்கவென்று நிலவறைவிரகிற்செய்த...... ... ...※
கடியவனியற்கைக்கஞ்சிக் கங்குலுங்கடிதிற்போகப்... ... ...※
படியவர்துயிலும்போகப் பரிதியுமுதயஞ்செய்தான்... ......※

[எ-து] அடியவர்களுடைய மனதிலேயுள்ளநிறைந்த அஞ்ஞானவிருளை நீக்குகின்ற ஸ்ரீகிருஷ்ணதேவரிருக்க வேண்டுமென்று உபாயமாய் நிலவறைசெய்த கடியவனாகிய துரியோதனனுடைய குணத்துக்குப்பயந்து இராப்பொழுதுஞ் சீக்கிரத்திலே நீங்கிப் பூமியிலுள்ளவர்கள் நித்திரையும் நீங்கச் சூரியனுதயஞ்செய்தான்-எ-று. (௱௮௩)

சிறந்தருசுடிகைநாகத் திரண்மணிபலவுஞ்சிந்தி... ... ... ...※
நிரந்தரமருவிவீழ நிறந்திகழுதயக்குன்றிற்... ...... ........※
பரந்தெழுமருக்கன்சூழ்ந்த படரிருட்கங்குல்கண்டு... ... ...※
புரந்தரன்கோயில்விட்ட பொங்கொளிதீபம்போன்றான் ... ...※

[எ-து] சர்ப்பத்தினுடைய உச்சியிலிருக்கின்ற திரட்சியையுடைய அநேகமணிகளுஞ் சிதறி எப்போதும் அருவிகளொழுகுகின்ற நிறத்தையுடைய உதயகிரியிலே பரவியெழுகின்ற சூரியன் எப்படி இருக்கின்றானென்னில் இருள்சூழ்ந்த இராத்திரியைக்கண்டுஇந்திரனானவன்தன் அரண்மனைக் கிட்டமிருந்த ஒளியையுடைய தீபத்தையொத்தான்-எ-று. (௱௮௪)

தொடர்ந்தொளிருதயராகத் தோடுநெருங்கிமேன்மே... ...※
லடர்ந்தரிபரந்தகர்ம னாகமவேதம்பாடத்......... ... .........※
தடங்கயன்மலைந்துலாவும் தாமரைமுகமுங்காதல்...... ... ...※
மடந்தையர்முகமுஞ்சேர மணம்பெறமலர்ந்தமாதோ ... ...※

[எ-து] தொடர்ச்சிகொண்டு பிரகாசிக்கின்ற உதயராகத்துடனே நெருங்கிமேலும் வண்டுகள்பரவி மன்மதனுடைய ஆகமவேதங்களைப்பாடத் த

டாகத்திலே சேற்கண்டைகள் சண்டையிட்டு உலாவுகின்றதாமரை முகை யினுடைய முகமும் ஆசையையுடைய மாதர்களுடைய முகமும் ஒருங்கு சேர மலரும்படி மலர்ந்தன-எ-று. (௱௮௫)

இருந்துயிலுணர்ந்தவேந்தர் யாவருமிரவிற்சற்றும்... ... ...*
வருந்துயிலிலாதகண்ணன் வாழ்பெருங்கோயில்புக்கார்... ...*
பெருந்துயிலனந்தபோகப் பாயினைதுறந்தமாலும்... ... ...*
அருந்துயிலெழுந்துகாலை யருங்கடன்முறையுஞ்செய்தான்...*

[எ-து] பெரியநித்திரை நீங்கிய அரசர்களெல்லோரும் சற்றாகிலும் நித்தி ரையில்லாத கிருஷ்ணதேவர் வாழ்கின்ற பெரியகோயிலுக்குப் போனார்க ளப்போது சேஷசயனத்திலே அரிதுயில்நீங்கிய மகாவிஷ்ணுவும் அரிய நித்திரைநீங்கிக் காலையிற்செய்யுங் கடன்களெல்லாஞ் செய்தார்-எ-று. ()

மாதவனிருந்தகோயில் வந்தடிவணங்கிமன்னன்... ... ......*
தூதுவராழியங்கைத் தோன்றலே துளபமாலே...... .........*
யாதவகுலத்தோரேறே யெழுந்தருள்கென்றுநின்னெம்......*
மேதகவரசனென்றார் முகுந்தனும்விரைவிற்சென்றான்... ...*

[எ-து] இப்படி கிருஷ்ணதேவரிருந்த அரமனையில் துரியோதனன் விடுத்த தூதர்கள்வந்து அவர்பாதத்தில்வணங்கிச் சக்ராயுதத்தையுடைய அரசனே துளபமாலையணிந்தமார்பனே யாதவகுலத்தோருக்கு ஒருஆண் சிங்கமே எங்களரசன் உம்மையழைத்துக்கொண்டு வரச்சொன்னானென் றார்கள் அதுகேட்டு கிருஷ்ணபகவானும் சீக்கிரத்திற்போனார்-எ-று. ()

கந்தடுகளிற்றுவேந்தன் கண்ணிலாவரசன்கங்கை.......... ......*
மைந்தனுமுதலாயுள்ள மன்னருமதிவல்லோரும்..................*
தந்திரவகையுமேனை யிளைஞருந்தன்னைச்சூழ...... ...... ...*
விந்திரனிருக்கையன்ன கோயிலூடினிதிருந்தான்...... ......*

(எ-து) கட்டுத்தறியையடுகின்ற யானையையுடைய துரியோதனராசனு னவன் திருதராட்டிரனும் பீஷ்மாசாரியார் முதலாகிய அரசர்களும்மந்திரிக ளும் தந்திரிகளும் மற்றதம்பிமார்களும் தன்னைச்சூழ இந்திரனுடைய அர சிருக்கைபோன்ற கோயிலிலே இனிதாக விருந்தான்-எ-று. (௱௮௮)

நாமவேலரசரோடு நால்வகைச்சேனையோடு...... ...... ...*
மாமுகில்வண்ணன்வந்தானென்றனர்வரவுகேட்டு...... ......*
வீமலர்த்தொடையினானும் வேத்திரத்தவரைநோக்கித்... ...*
தாமரைத்தடங்கண்மாயன் றன்னையேவிடுமினென்றான் ......*

[எ-து] அச்சத்தைத்தருகின்ற வேலாயுதத்தையுடையஅரசர்களோடும் ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனையோடும் மேகவண்ணனான கிருஷ்ணதேவர் வந்தாரென்று சொன்னார்கள் அதுகேட்டு புஷ்பமாலைய ணிந்த துரியோதனனும் பிரம்பையுடைய சேவகரைப்பார்த்துத் தாமரைம

லர்போன்ற விசாலமாகிய கண்களையுடைய அந்தக்கிருஷ்ணனை மாத்திரம் விடுங்களென்று சொன்னான்-எ-று. (௱௮௯)

தன்பெருஞ்சேனைநிற்கத் தண்டுழாயலங்கலானு.............*
மின்புறநகைத்துவேந்த ரிருந்தபேரவையினெய்த.............*
மின்புணர்துவசநாக விடநிகர்மனத்தினானும்.............*
அன்பொடுதிகிரியானை யதன்மிசையிருக்கவென்றான்.............*

[எ-து] தன்னுடைய பெரிய சேனைகளெல்லாமிருக்கத் துளபமாலையை யணிந்த கிருஷ்ணதேவரும் இன்பம்பொருந்தப் புன்சிரிப்புக் கொண்டு அரசர்களிருந்த பெரியசபைக்குப்போகப் பிரகாசமுள்ள சர்ப்பக்கொடியையும் விஷத்துக்குச் சமானமாகிய மனத்தையுமுடைய துரியோதனனும் அன்புடனே ஸ்ரீகிருஷ்ணனை அதன்மேலே யிருப்பியென்றான்-எ-று. ()

வேறு.

இறைவனெழிற்கதிர்மணிகள்பூத்திய தவிசினிருத்தலுமே.............*
நெறுநெறனக்கொடுநிலவறையிற்புக நெடியவனெப்பொழுதே.............*
மறலியெனத்தகுநிருபனியற்றிய விரகைமனத்துணரா.............*
மூறுகுசினத்தொடுமடிய தலத்துற முடிககனத்துறவே.............*

[எ-து] கிருஷ்ணதேவர் கிரணங்களையுடைய ரத்னங்களைப்பதித்தஆசனத்திலிருந்தவளவிலேநெறுநெறுவென்று கொடிய நிலவறையிலே அதுபுக அவர் அப்போது கூற்றுவனென்று சொல்லத்தக்க துரியோதனன்செய்தசூதை மனதிலேயறிந்து மிகுந்த கோபத்துடனே பாதங்கள் பாதாளத்திலேபொருந்த சிரசு ஆகாயத்திலே பொருந்த-எ-று. (௱௯௧)

அஞ்சினமஞ்சினமென்றுவிரைந்தய ரண்டர்பணிந்திடவும்.............*
துஞ்சினமின்றெவன்பணிதியின் கிளையதுதுன்பமுழந்திடவும்.............*
வஞ்சமனங்கொடுவஞ்சகனின்றிடுவஞ்சனைநன்றிதெனு.............*
நெஞ்சில்வெகுண்டுலகொன்று படும்படிநின்றுநிமிர்ந்தனனே.............*

(எ-து) பயந்தோம்பயந்தோமென்று சீக்கிரத்தில் உயர்ந்ததேவர்கள் வணங்கவும்இன்று இறந்தோமென்று சர்ப்பக்கூட்டங்கள் துன்பப்படவும் வஞ்சகமனத்தைக்கொண்டு துரியோதனன் இன்றுசெய்த இந்தவஞ்சகம் நன்றாயிருக்கின்றதென்று மனதிலேகோபித்து உலகமெல்லாம் ஒன்றுபடும்படிநின்று உயர்ந்தார் கிருஷ்ணதேவர்-எ-று. (௱௯௨)

மல்லராக்கர்குலத்தொடுபப்பரர் வாளினர்வேலினர்போர்.............*
வில்லினரிப்படிதுற்ற நிலத்திடைமேவியதீரரெலாம்.............*
தொல்லையிடிக்கயர்வுற்று யிரற்றுறுசுடிகையதாமெனவே.............*
கல்லெனவுட்கினர்த்தத்தமுடம் பலகால்கொடுதைத்திடவே.............*

(எ-து) மல்லர்கள் ராட்சதர்கள் பப்பரர்கள் வாளையுடையவர் வேலையுடையவர் பொருகின்ற வில்லையுடையவர் இப்படி பூமியிலே வெட்டிய நில

வரையிலேயிருந்த சுத்தவீரர்களெல்லாம் இடிக்குப்பயந்து வருத்தமடைந்து உயிரற்றிருந்த சிரசையுடைய சர்ப்பங்களைப்போலக் கல்லென்றுமோசையுடனேயஞ்சினார்கள் தங்கள் தங்கள் தேகத்திலே பலகால்களைக்கொண்டுடைத்திட-எ-று. (௱௪௩)

அற்புதபங்கயநற்பதமூந்த வினைக்குழியின்புடையே...... ......... ※
சுற்பதலங்கொளுமற்றுவிழுந்தன தத்தநெடுந்தலைபோய்............... ※
முற்பவனன்பொரமுக்குவடுந் துணிபட்டுமடங்கியபொன்......... ※
வெற்பெனநின்றனர்வெற்றுடலங் கொடுவிற்படைகொண்டவரோ......... ※

(எ-து) அழகியதாமரை மலர்போன்ற நல்லபாதத்தினா லுதைத்தலினால் அந்தக்குழியினிடத்திலே நாகலோகந்தோறும் அற்றுவிழுந்ததம்முடைய நெடியதலைகளெல்லாம்போய் முன்வாயுபகவான் போர்செய்ய மூன்றுசிகரமுந் துணிப்பட்டுவிளைந்த பொன்மலைபோல் நின்றார்கள் வெற்றுத் தேகங்கொண்டு விற்படைகொண்ட சுத்தவீரர்கள்-எ-று. (௱௪௪)

மேல்வலியுற்றெதிர்வீசியெழிற் கருமேகநிறத்திருமால்...... ......... ※
கால்விசையிற்படமோது தலைப்பொருகாமர்புயத்துணைபோய்............ ※
நீலநிறக்கவின்வாசவன் வச்சிரமீள்படையிற்சிறகீர்.................. ※
மால்வரையொத்தனர்வாகை பெறக்கதிர்வாள்களெடுத்தவரோ......... ※

(எ-து) அழகிய கரியமேகவண்ணனாகிய கிருஷ்ணதேவர் மேலேவலிமைகொண்டு எதிரேவீசி கால்விசையினாலே படும்படிமோதுதலினாலே பொருகின்ற அழகிய புசங்களிரண்டும்போய் நீலநிறத்தையுடையஅழகிய யிந்திரனுடைய வச்சிராயுதத்தினாலே சிறகறுப்புண்ட பெரியமலைகளையொத்தார்கள் வெற்றிபெறும்படி வாளாயுதங்களை யெடுத்த சுத்தவீரர்கள்-எ-று. (௱௪௫)

வெயில்விடுபைத்தலையமணி மிசைத்துயில்விபுதர்களுக்கரியோன் ... ... ※
பயிலவுதைத்தனவர்களுரத்திடைபதமலர்பட்டுருவா... ...... ...... ※
மயில்கடவிக்கவுணர்பகையைக் கதிர்மகுடமுருக்கியவேள்......... ...... ※
அயில்கொடுகுத்தியநெடுவரையொத்தன ரயில்களெடுத்தவரோ........... ※

(எ-து) ஒளியுள்ள சிரோன்மணியையுடைய ஆதிசேடன்மேல்நித்திரைசெய்கின்ற தேவர்களுக்கரிய கிருஷ்ணதேவர் உதைத்தபடியால் அவர்கள்மார்பிலே பாதங்கள்பட்டு ஊடுருவி மயில்வாகனத்தைச்செலுத்தி தேவர்கள்பகையாகிய சூரபத்மாமுதலிய அசுரர்களை சங்கரித்த சுப்பிரமணியசுவாமி வேலாயுதங்கொண்டு குத்திய நெடிய கிரௌஞ்சகிரியை ஒத்தார்கள் வேலாயுதங்களெடுத்த வீரர்கள்-எ-று. (௱௪௬)

மின்சுடிகைப் புயங்கன்வெருக்கொளுநம் வெங்கருடக்கொடியோன்... ...※
வன்பதபத்மமகங்கொ டெடுத்துயர்வன்கனத்திடலால்.................. ※
முன்புவனத்திடைவந்துகவிக்கிறை மொய்ம்புனைரப்புகல்போ ...... ...※
தென்புமலைக்குறுபண்டைய யடுத்தனரொஞ்சியபப்பரரோ..................... ※

(எ-து) மின்னுகின்றரத்னம் விளங்கிய உச்சியையுடையசர்ப்பங்கள் அஞ்சுகின்ற வெவ்விய கருடக்கொடியோனாகிய கிருஷ்ணதேவர் தம்முடைய பாததாமரையிலிருக்கும் நகத்தைக்கொண்டு எடுத்து உயர்ந்த ஆகாயத்திலேயெறிதலால் முன்காட்டிலேவந்து சுக்ரீவன் வலுமையை யறியச்சொன்னபோது இராமரால் துந்துபியெலும்பு மலை எனப்பட்டதோ அதையடுத்தார்கள் வலுமைகுறைந்த பப்பரர்-எ-று. (௱௪௭)

மைந்துபடத்துயர்பஞ்சவர் சொற்படிவந்தமலர்க்கழலா...................※
லுந்திபுதைத்துடலம்புதையப் பிலமொன்றியொளித்திடலா...... ......※
லந்தனென்முற்பகல்வந்து புடைத்திடவஞ்சிநிலத்திடைவீழ்...... ......※
விந்தமொடொத்தனர் வன்குழியிற்றிகழ்வெங்கணரக்கருமே...... ......※

(எ-து) வலுமைபடைத்து உயர்ந்த பஞ்சபாண்டவர் சொற்படிதூதுவந்த மலர்போன்ற பாதத்தினால் தள்ளியுதைத்து தேகம்புதையப் பிலத்துவாரத்திலே ஒன்றி ஒளித்திடும்படி செய்தலாலே அகஸ்தியமுனிவர் முன்னாளிலேவந்து தள்ளப்பயந்து பூமியிலே வீழ்ந்த விந்தகிரியை யொத்தனர் நிலவறையிலே அகப்பட்ட வெவ்விய கண்களையுடைய ராட்சதர்கள் எ-று. (௱௪அ)

அந்தவிடத்தெறிபம்பர மொத்துடலஞ்சுழலச்சுழலக் ...................※
குந்தியுரித்தயிருண்டவர் பொற்கழல்கொண்டுசுழற்றுதலால்...... ......※
முந்தமரர்க்கமுதந்தர மைக்கடன்முன்சுழலச்சுழலும்............... ......※
மந்தரமொத்தனர்குந்தமெடுத் தெதிர்வந்துமலைத்தவரோ...... ... ......※

(எ-து) அந்தநிலவறையிலே யெறிகின்ற பம்பரத்தை யொத்துத்தேகஞ்சுழலச்சுழலக் குந்தியிருந்து உறியிலிருந்த தயிரையுண்ட கிருஷ்ணதேவரானவர் பொன்போன்ற பாதத்தைக்கொண்டு சுழற்றுகையினாலே முன்னை தேவர்களுக்கு அமுதுகொடுக்கச் சமுத்திரமானது சுழலச்சுழலுகின்ற மந்தரகிரியை யொத்தார்கள் எறியீட்டி யெடுத்து யெதிரேவந்து யுத்தஞ்செய்த சுத்தவீரர்கள்-எ-று. (௱௪௯)

முட்டியதொல்குறுவொக்கடன் மல்கவின்முட்டிகொள்பல்விரலா ... ...※
னெட்டுடலம்வகிர்பட்டதினுள்விழ நித்தர்செய்[illegible]தொல்வினையா...........※
மட்டறவல்விறலுற்றெதிர் செல்கவிமைக்கடலெ[illegible]லையிலே... ... ... ...※
விட்டெனகல்வரையொத்தனர் வெல்கழலெக்கு[illegible] மல்லருமே... .........※

(எ-து) அந்த நிலவறையை முட்டப்பெ[illegible] ரத்தசமுத்திரம் நிறைந்தபடியால் முட்டிக்கொள்ளுகின்ற பலவிரல்க[illegible]னாலே நெடியதேகப்பிளவுபட்டு அதினுள்ளேவிழ கிருஷ்ணதேவர்செ[illegible] செய்கையினாலே அளவற்றவலுமைகொண்டு எதிரிட்டுச்சென்ற வான[illegible]கள் கரியகடலிலேயிட்ட பர்வதங்களையொத்தனர் வெல்லுகின்ற வீரக்[illegible]லையணிந்த கூட்டமாகிய எவ்விதமல்லர்களும்-எ-று. (௨௱)

எப்புவிநிற்பனவெக்கிரிநிற்பன வெக்கடனிற்[illegible]வெண்................※
றிப்புவனத்துயிர்முற்று மயக்குறவுட்கினமொ[illegible]மைமோார்...............※

மைப்புயலொத்தொளிர் பச்சைநிறத்தினைவர்க்கமலர்க்கழலா............*
லொப்புமடக்குழியும்மவனைப்பட வொத்திமிதித்தனுமே... ...... ......*

(எ-று) இனி எந்தப்பூமிகள்நிற்கும் எந்தமலைகள்நிற்கும் எந்தக்கடல்கள் நிற்குமென்று இந்தப்பூமியிலுள்ள உயிர்முழுவதும் பயக்கத்தையடைய தேவர்கள் அஞ்சியிளைத்தார்கள் கரியமேகத்தையொத்து விளங்கிய கிருஷ்ணதேவர் அநேகமலர்போன்ற திருவடிகளால் ஐயமில்லாமல் நிலவறையிலிருந்தவனை படும்படி ஒத்திமிதித்தவர்-எ-று. (உ௱க)

கொண்டன்முழக்கெனவம்புவியைக் கடல்கொண்டெழுந்தெதிரும்...*
சண்டமுழக்கெனவண்புவனக் கிளைந்தமுழக்கெனவே......................*
வண்டிணமொய்த்தொழுவண் டுளபத்தொடைவண்டுவராத்திருமா.....*
லண்டமுகட்டுறநின்றுசிரித்தன னங்கவரைப்பெருமே.... ...... ......*

(எ-று) மேகமுழக்கமென்று சொல்லவும் பூமியைக் கடல்கொண்டெழுந்து எதிரும்வேகத்தையுடைய முழக்கமென்றுசொல்லவும் வலுமைபொருந்திய வாயுவின்கூட்டஞ்செய்த முழக்கமென்று சொல்லவும் வண்டுகள் மொய்த்தெழுகின்ற வளத்தையுடைய துளபமாலையையணிந்த துவாரகைக்கு அரசராகிய கிருஷ்ணதேவர் அண்டமுகடளாவநின்று அழுகியகண்ணில் நெருப்பெழச்சிரித்தார்-எ-று. (உ௱உ)

ஒன்றுபடக்கடலம்புமுகப்பன வும்பர்குலத்துருவஞ்.....................*
சென்றுமறிப்புனவெண்டிசையிற்குல சிந்துரமெய்றுவவென்......*
குன்றமுடைப்பனபைம்பொனிமக் கிரிகொண்டுதிரிப்பனவா...........*
லென்றுதனித்தனிநின்று மலைத்தருள்ளங்கைகள்பற்பலவே.... ...... ......*

(எ-று) அப்போது வெவ்வேறுயுத்தஞ்செய்த பலகைகளிலே சிலகைகள் சமுத்திர நீரையெல்லாம் ஒன்றுபடும்படி மொள்ளுஞ்சிலகைகள் தெய்வலோகத்திலிருக்கும் பஞ்சதருக்களையும் போய்முறிக்குஞ் சிலகைகள் எட்டுத்திக்கிலும்போய் அட்டகஜங்களையும் தள்ளுஞ்சிலகைகள் அட்டகுலபர்வதங்களையும் உடைக்குஞ் சிலகைகள் மகமேருவைச் சுற்றுமென்றவாறு. (உ௱௩)

துகிரிதழ்வைத்துநல்வளைகண்முழக்கின தொடர்சிலகைத்தலமே... ...*
யகிலம்வெருக்கொளவரிமழு வெற்றினவவைசிலகைத்தலமே..........*
புகலும்வடிக்கணையுவனமெடுத்தன பொருசிலகைத்தலமே ... ...... ...*
திகழ்விசையத்தொடுசிலைகள் குனிப்பனசிலசிலகைத்தலமே............*

(எ-று) சிலகைகள் பவளம்போன்ற வாயிலே சங்குகளைவைத்துமுழக்கஞ்செய்தன சிலகைகள் பூலோகமஞ்சும்படி எரிகின்ற மழுவாயுதங்களை எறிந்தன சிலகைகள் சொல்லுகின்ற கருடாஸ்திரங்களை எடுத்தனசிலகைகள் ஜயத்துடனே வில்லுகளைக் குனிப்பனசிலகைகள்-எ-று. (உ௱௪)

வெங்களையத்திரள்குந்திநரப்படை வெம்புழலக்கைகள்போர்,... ... ...*
பொரங்கியவச்சிரமந்துகலப்பைகள் புன்கழுவர்க்கழுமே... ...... ......*

யெக்குமலைத்தெழுசெஞ் சுரிகைத்திரடண்டமெனப்பலபோர் ... ... ...*
தங்கியசக்கரபந்திதரித்தன தன்பலகைத்தலமே............ ...........*

(எ-து) வெவ்விய வளைதடிகள் கைவேல்கள் வெம்பச்செய்யும் உலக்கைகள் போராமிகச்செய்கின்ற வச்சிராயுதங்கள் எறிகின்ற கலப்பைகள் சூலவர்க்கங்கள் எவ்விடத்தும் போர்செய்தெழுகின்ற உடைவாள்கள் தண்டாயுதங்கள் பலபேர்தங்கிய சக்கிரபந்திகளாகிய இவைகளைத் தரித்திருந்தன அனேகங்கைகளென்றவாறு. (௨௱௫)

மேலெழுமங்கதிர்வாளுறைபோம்படி வீசினவான்படையே...... ... ...*
தோலினமேந்தினநீள்கவனேந்தின சோரிகள்சோர்ந்திடவே...........*
ஞாலமெலாம்பொருதோமரம் வாங்கினநாவொருமூன்றெனலாம்........*
சூலமொடோங்கினபாசமொடோங்கின சூழ்சிலபூங்கரமே...............*

(எ-து) சிலகைகள் மேலே எழுகின்ற அழகிய கிரணங்களையுடைய வாளாயுதங்களை உறைபோகும்படி வீசுதல்செய்தன சிலகைகள் கேடயங்களேந்தின சிலகைகள் நெடியகவண்களேந்தின சிலகைகள் உதிரமொழுகப் பூமிமுழுவதையும் பொருகின்ற பெருங்கவண்கள் கொண்டன சிலகைகள் நாக்குகள்மூன்றென்னப்பட்ட சூலங்களோடுயர்ந்தனசிலகைகள் பாசங்களோடுயர்ந்தன-எ-று. (௨௱௬)

சிலசிலகைத்தலமுடுகழலிற்பல செறிகழல்கட்டினவே... ... ... ... ......*
சிலசிலகைத்தலமறுகுபுயத்திடை செந்தொடையிட்டனவே...........*
சிலசிலகைத்தலமணி கொளுரத்திடைபணிகடிருத்தினவே...... ... ...*
சிலசிலகைத்தலம்விரல்கொடுசுட்டினசெறுநர்திகைத்திடவே............*

(எ-து) சிலசிலகைகள் கொல்லுகின்ற பாதங்களிலே வீரக்கழல்களைக்கட்டின சிலசிலகைகள் புஜங்களிலே மலர்மாலைகளிட்டன சிலசிலகைகள் அழகினைக்கொண்டமார்பிலே ஆபரணங்களைத்திருத்தின சிலசிலகைகள் சத்துருக்கள்திகைக்கும்படி விரல்களைக்கொண்டு சுட்டிக்காண்பித்தன. என்றவாறு. (௨௱௭)

மாயிருஞாலமெலாம்வெளியா யொளிர்மரகதசோபையுறப் ... ... ... ...*
போயிருபாலும்வளைந்துவளைந்தெதிர் பொருமுனைவெம்படையோ.. ...*
டாயிரமாயிரமங்கைபுறப்பட வண்டருமாதவரும்..................... ............*
மாயிரநான்மறைபாடிவியந்து பணிந்துபுகழ்ந்தனரே......................*

(எ-து) மகத்தாகிய பெரியபூமியெல்லாம் வெளியாய் விளங்குகின்ற மரகதத்தின் பிரகாசம்பொருந்த இரண்டுபக்கத்திலும்போய் வளைந்துவளைந்து எதிரேபொருகின்ற முனையையுடைய வெவ்விய ஆயுதத்துடன் இரண்டாயிரங்கைகள் புறப்படதேவர்களும் முனிவர்களும் பாயிரமுள்ள நாலுவேதங்களைப்பாடி அதிசயித்துப்பணிந்து புகழ்ந்தார்கள்-எ-று. ()

ஆரணனேயரனேபுவனங்க ளனைத்தையுமன்றுதவுங்.....................*
காரணனேகருணாகரனே கமலாசனிகாதலனே...... ...... ...... ......*

வாரணமேபொதுவாயொரு பேரிடவந்தருளும்படியலே...... ............❋
நாரணனேமுனியேல்முனியேலென நாகர்பணிந்தனரோ........ ........❋

(எ-து) பிரமதேவனே - உருத்திரமூர்த்தியே புவனங்களை யெல்லாம் அன்றுவுதவிய மகாவிஷ்ணுவே, கிருபைக்கிடையானவனே, லட்சுமிக்கு க்கணவனே, கெஜேந்திரன் ஆதிமூலமேயென்று பொதுவாயொரு பேரிட டழைக்க நானே அப்பேருக்கு உடையவனென்றுவந்த மேகவண்ணனே, நாராயணனே கோபியாதே கோபியாதேயென்று தேவர்கள் வணங்கினார் கள்-எ-று. (உாகூ)

மாதவனேமுனியேலெமை யாளுடை வானவனேமுனியேல்............❋
மாதவனேமுனியேலிதயத்தி லிருப்பவனேமுனியே...................❋
மாதவனேமுனியேல்மனி வெங்கனலானவனேமுனியே ... .............❋
நீதவனேமுனியேன்முனியே லெனநின்றுபணிந்தனரோ... ............❋

(எ-து) மாதவனே கோபியாதே எங்களை அடிமையாகவுடைய தேவ னே கோபியாதே யாதவமரபில்வந்தவனே கோபியாதே அடியார்கள் மன திலிருப்பவனே கோபியாதே சோமசூரியாக்கினி யானவனே கோபியாதே நீதியையுடையவனே கோபியாதே கோபியாதேயென்று நின்றுபணிந்தார் கள்-எ-று. (உாய)

கங்கைமகன்கதிரோன்மகனம்பிகை காதன்மகன்றனையர்...............❋
அங்கவயின்கணிருந்தராதிப ரடையவெழுந்தவே......................❋
செங்கைகுவித்தசிரத்தின ராயுணர்வொன்றியசிந்தையரா...... ........❋
யெங்கள்பிழைத்தலையின்று பொறுத்தருளென்றுபணிந்தனரோ...........❋

(எ-து) பீஷ்மாசாரி-கர்ணன்-திருதராட்டிரன் அவன்பிள்ளைகள் அங் கேசபையிலே யிருந்தராசாக்களெல்லாம் எழுந்திருந்து சிரசின்மேல் கை களைக்கூப்பிக்கொண்டவர்களாய் அறிவுமிகுந்த மனமுடையவராய் நாங்க ள்செய்த தப்பிதத்தை இன்றுபொறுத்தருள்வாயென்று வணங்கினார்கள்-என்றவாறு. (உாயக)

கண்ணபொறுத்தருள்வெண்ணெ யருந்தியகள்வபொறுத்தருள்கார்.... ❋
வண்ணபொறுத்தருள்வாமபொறுத்தருள்வரதபொறுத்தருணி..........❋
தின்னமனத்துணர்வொன்றுமிலாதவர்செய்தபெரும்பிழையென்.......❋
மன்னன்மலர்க்கழல்சென்னியில்வைத்தெதிரன்றுதுதித்தனரோ ... ...❋

(எ-து) கண்ணனேபொறுத்தருள், ஆயர்பாடியில்வெண்ணெயுண்ட கள்வனே பொறுத்தருள்மேகவண்ணனே பொறுத்தருள் வாமனேபொ றுத்தருள் வரதனேபொறுத்தருள் சத்தியமாகமனதிலே அறிவான தெவ் வளவுமில்லாத சிறியவர்கள்செய்த பெரும்பிழையென்று ஸ்ரீகிருஷ்ணதே வருடைய தாமரைமலர்போன்ற பாதங்களைச் சிரசிலேவைத்துக்கொண்டு எதிரேநின்று அன்றுதுதிசெய்தார்கள்-எ-று. (உாயஉ)

(எ-து) மின்னுகின்றரத்னம் விளங்கிய உச்சியையுடையசர்ப்பங்கள் அஞ்சுகின்ற வெவ்விய கருடக்கொடியோனாகிய கிருஷ்ணதேவர் தம்முடைய பாததாமரையிலிருக்கும் நகத்தைக்கொண்டு எடுத்து உயர்ந்த ஆகாயத்திலேயெறிதலால் முன்காட்டிலேவந்து சுக்ரீவன் வலுமையை யறியச் சொன்னபோது இராமரால் துந்துபியெலும்பு மலை எனவபாடுபட்டதோ அதையடித்தார்கள் வலுமைகுறைந்த பப்பரர்-எ-று. (௱௬௭)

மைந்துபடத்துயர்பஞ்சவர் சொற்படிவந்தமலர்க்கழலா......※
லுந்திபுதைத்துடலம்புதையப் பிலமொன்றியொளித்திடலா...... ※
லந்தணன்முற்பகல்வந்து புடைத்திடவஞ்சிநிலத்திடைவீழ்...... ※
விந்தமொடொத்தனர் வன்குழியிற்றிகழ்வெங்கணரக்கருமே...... ※

(எ-து) வலுமைபடைத்து உயர்ந்த பஞ்சபாண்டவர் சொற்படிதூதுவந்த மலர்போன்ற பாதத்தினால் தள்ளியுதைத்து தேகம்புதையப் பிலத்துவாரத்திலே ஒன்றி ஒளித்திடும்படி செய்தலாலே அகஸ்தியமுனிவர் முன்னாளிலேவந்து தள்ளப்பயந்து பூமியிலே வீழ்ந்த விந்தகிரியை யொத்தனர் நிலவறையிலே அகப்பட்டவெவ்விய கண்களையுடைய ராட்சதர்கள் எ-று. (௱௬௮)

அந்தவிடத்தெறிபம்பர மொத்துடலஞ்சுழலச்சுழலக் ........※
குந்தியுரித்தயிருண்டவர் பொற்கழல்கொண்டுசுழற்றுதலால்...... ※
முந்தமரர்க்கமுதந்தர மைக்கடன்முன்சுழலச்சுழலும்...... ※
மந்தரமொத்தனர்குந்தமெடுத் தெதிர்வந்துமலைத்தவரே...... ※

(எ-து) அந்தநிலவறையிலே யெறிகின்ற பம்பரத்தை யொத்துத்தேகஞ்சுழலச்சுழலக் குந்தியிருந்து உறியிலிருந்த தயிரையுண்ட கிருஷ்ணதேவரானவர் பொன்போன்ற பாதத்தைக்கொண்டு சுழற்றுகையினாலே முன்னே தேவர்களுக்கு அமுதுகொடுக்கச் சமுத்திரமானது சுழலச்சுழலுகின்ற மந்தரகிரியை யொத்தார்கள் எறியீட்டி யெடுத்து யெதிரேவந்து யுத்தஞ்செய்த சுத்தவீரர்கள்-எ-று. (௱௬௯)

முட்டியதொல்குருவொக்கடன் மல்கவின்முட்டிகொள்பல்விரலா ......※
னெட்டுடலம்வகிர்பட்டதினுள்விழநித்தர்செய்தொல்வினையா.........※
மட்டறவல்விறலுற்றெதிர் செல்கவிமைக்கடலெல்லையிலே... ... ... ...※
விட்டெனகல்வரையொத்தனர் வெல்கழலெக்குலமல்லருமே... ......※

(எ-து) அந்த நிலவறையை முட்டப்பெற்ற ரத்தசமுத்திரம் நிறைந்தபடியால் முட்டிக்கொள்ளுகின்ற பலவிரல்களினாலே நெடியதேகம்பிளவுபட்டு அதினுள்ளேவிழ கிருஷ்ணதேவர்செய்த செய்கையினாலே அளவற்றவலுமைகொண்டு எதிரிட்டுச்சென்ற வானரங்கள் கரியகடலிலேயிட்ட பர்வதங்களையொத்தனர் வெல்லுகின்ற வீரக்கழலையணிந்த கூட்டமாகிய எவ்விதமல்லர்களும்-எ-று. (௨௱)

எப்புவிநிற்பனவெக்கிரிநிற்பன வெக்கடனிற்பனவென்......※
றிப்புவனத்துயிர்முற்று மயக்குறவுட்கினொத்திமையோர்......※

னமைப்புயலொத்தொளிர் பச்சைநிறத்தினன்வர்க்கமலர்க்கழலா..............*
லொப்புமைட் குழியுறவனைப்பட வொத்தியிருந்தனுமே... ....... .......*

(எ-து) இனி எந்தப்பூமிகள்மிஞ்சும் எந்தமலைகள்மிஞ்சும் எந்தக்கட ல்கள் மிஞ்சுமென்று இந்தப்பூமியிலுள்ள உயிர்முழுவதும் பயக்கத்தையுடைய தேவர்கள் அருந்தியினார்கள் கரியமேகத்தையொத்து விளங்கி யகிருஷ்ணதேவர் அனேகமலர்போன்ற திருவடிகளால் ஐயமில்லாமல் நில வறையிலிருந்தவரை பசிம்படி ஒத்தியிருந்தவர்-எ-று. (௨௱௧)

கொண்டன்முழக்கெனவம்புவியைக் கடல்கொண்டெழுந்தெதிருந்...*
சண்டமுழக்கெனவண்புவனக் கிளைந்தமுழக்கெனவே....................*
வண்டினமொய்த்தொழுவண் டுளபத்தொடைவண்டுவராத்திருமா......*
லண்டமுகட்டெழநின்றுசிரித்தன னங்கணெருப்பெழவே.... ....... .......*

(எ-து) மேகமுழக்கமென்று சொல்லவும் பூமியைக் கடல்கொண்டெ ழுந்து எதிரும்வேகத்தையுடைய முழக்கமென்றுசொல்லவும் வலுமை பொருந்திய வாயுவின்கூட்டஞ்செய்த முழக்கமென்று சொல்லவும் வண் டுகள் மொய்த்தெழுகின்ற வாசத்தையுடைய துளபமாலையையணிந்த துவா ரகைக்கு அரசராகிய கிருஷ்ணதேவர் அண்டமுகடளாவநின்று அழகியக ண்ணில் நெருப்பெழச்சிரித்தார்-எ-று. (௨௱௨)

ஒன்றுபடக்கடலம்புமுகப்பன வும்பர்குலத்துருவஞ்........................*
சென்றுமுறிப்பனவெண்டிசையிற்குல சிந்துரமெற்றுவவெண்... ... ...*
குன்றமுடைப்பனவைம்பொறிதக் கிரிகொண்டுதிரிப்பனவா..............*
லென்றுதளிர்த்தனிநின்று மலைத்தருளங்கைகள்பற்பலவே....... .......*

(எ-து) அப்போது வெவ்வேறாயுத்தஞ்செய்த பலகைகளிலே சில கைகள் சமுத்திர நீரையெல்லாம் ஒன்றுபடும்படி மொள்ளுஞ்சிலகைகள் தெய்வலோகத்திலிருக்கும் பஞ்சதருக்களையும் போய்முறிக்குஞ் சிலகை கள் எட்டுத்திக்கிலும்போய் அட்டகஜங்களையும் தள்ளுஞ்சிலகைகள் அட் டகுலபர்வதங்களையும் உடைக்குஞ் சிலகைகள் மகமேருவைச் சுற்றுமெ ன்றவாறு. (௨௱௩)

துகிரிதழ்வைத்துவளைகண்முழக்கின தொடர்சிலகைத்தலமே... ...*
யகிலம்பொருக்கொளவெரிமழு வெற்றினவைசிலகைத்தலமே.............*
புகலும்வடிக்கணையுவணமெடுத்தன பொருசிலகைத்தலமே ... ....... ...*
திகழ்விசையத்தொடுசிலைகள் குனிப்பனசிலசிலகைத்தலமே............*

(எ-து) சிலகைகள் பவளம்போன்ற வாயிலே சங்குகளைவைத்துமு ழக்கஞ்செய்தன சிலகைகள் பூலோகமஞ்சும்படி எரிகின்ற மழுவாயுதங்க ளை எறிந்தன சிலகைகள் சொல்லுகின்ற கருடாஸ்திரங்களை எடுத்தனசில கைகள் ஜயத்துடனே வில்லுகளைக் குனிப்பனசிலகைகள்-எ-று. (௨௱௪)

வெங்கணையத்திரள்குந்தநாப்படை வெட்டுமுலக்கைகள்போர்,... ... ...*
பொங்கியவச்சிரமுஞ்சுவலப்படைகள் புன்கழுவர்க்கமுமே... ...... ......*

யெங்குமலைத்தெழுசெஞ் சுரிகைத்திரடண்டமெனப்பலபேர் ... ......*
தங்கியசக்கரபந்திதரித்தன தன்பலகைத்தலமே............ ............*

(எ-து) வெவ்விய வளைதடிகள் கைவேல்கள் வெம்பச்செய்யும் உலக்கைகள் போணாமிகச்செய்கின்ற வச்சிராயுதங்கள் எறிகின்ற கலப்பைகள் சூலவர்க்கங்கள் எவ்விடத்தும் போர்செய்தெழுகின்ற உடைவாள்கள் தண்டாயுதங்கள் பலபேர்தங்கிய சக்கிரபந்திகளாகிய இவைகளைத் தரித்திருந்தன அனேகங்கைகளென்றவாறு. (௨௱௫)

மேலெழுமங்கதிர்வாளுறைபோம்படி வீசினவான்படையே...... ... ...*
தோலினமேந்தினநீள்கவணேந்தின சோரிகள்சோர்ந்திடவே............*
ஞாலமெலாம்பொருதோமரம் வாங்கினநாமொருமூன்றெனலாம்.........*
சூலமொடோங்கினபாசமொடோங்கின சூழ்சிலபூங்கரமே...............*

(எ-து) சிலகைகள் மேலே எழுகின்ற அழகிய கிரணங்களையுடைய வாளாயுதங்களை உறைபோகும்படி வீசுதல்செய்தன சிலகைகள் கேடயங்களேந்தின சிலகைகள் நெடியகவண்களேந்தின சிலகைகள் உதிரமொழுகப் பூமிமுழுவதையும் பொருகின்ற பெருங்கல்கள் கொண்டன சிலகைகள் நாக்குகள்மூன்றென்னப்பட்ட சூலங்களோடுயர்ந்தன சிலகைகள் பாசங்களோடுயர்ந்தன-எ-று. (௨௱௬)

சிலசிலகைத்தலமடிகழலிற்பல செறிகழல்கட்டினவே... ... ... ......*
சிலசிலகைத்தலமறுகுபுயத்திடை செந்தொடையிட்டனவே............*
சிலசிலகைத்தலமணி கொளுரத்திடைபணிகடிருத்தினவே...... ... ...*
சிலசிலகைத்தலம்விரல்கொடுசுட்டினசெறுநர்திகைத்திடவே............*

(எ-து) சிலசிலகைகள் கொல்லுகின்ற பாதங்களிலே வீரக்கழல்களைக்கட்டின சிலசிலகைகள் புஜங்களிலே மலர்மாலைகளிட்டன சிலசிலகைகள் அழகினைக்கொண்டமார்பிலே ஆபரணங்களைத்திருத்தின சிலசிலகைகள் சத்துருக்கள்திகைக்கும்படி விரல்களைக்கொண்டு சுட்டிக்காண்பித்தன. என்றவாறு. (௨௱௭)

மாயிருஞாலமெலாம்வெளியா யொளிர்மரகதசோபையுறப் ... ... ... ...*
போயிருபாலும்வளைந்துவளைந்தெதிர் பொருமுனைவெம்படையோ.. ...*
டாயிரமாயிரமங்கைபுறப்பட வண்டருமாதவரும்............ ..........*
பாயிரநான்மறைபாடிவியந்து பணிந்துபுகழ்ந்தனரே......................*

(எ-து) மகத்தாகிய பெரியபூமியெல்லாம் வெளியாய் விளங்குகின்ற மரகதத்தின் பிரகாசம்பொருந்த இரண்டுபக்கத்திலும்போய் வளைந்துவளைந்து எதிரேபொருகின்ற முனையையுடைய வெவ்விய ஆயுதத்துடன் இரண்டாயிரங்கைகள் புறப்பட தேவர்களும் முனிவர்களும் பாயிரமுள்ள நாலுவேதங்களைப்பாடி அதிசயித்துப்பணிந்து புகழ்ந்தார்கள்-எ-று. ()

ஆரணனேயரனேபுவனங்க ளனைத்தையுமன்றுதவுங்......................*
காரணனேகருணாகரனே கமலாசனிகாதலனே..........................*

வாரணமேபொதுவாயொரு பேரிடவந்தருளும்படியலே...... ...........*
நாரணனேமுனியேல்முனியேயெனநாயகர்பணிந்தனரோ.... ...... ......*

(எ-து) பிரமதேவனே - உருத்திரமூர்த்தியே புவனங்களையெல்லாம் அன்றுவுதவிய மகாவிஷ்ணுவே, கிருபைக்கிடமானவனே, ஜகத்ரக்ஷகனவனே, கஜேந்திரன் ஆதிமூலமேயென்று பொதுவாயொரு பேரிட்டழைக்க நானே அப்பேருக்கு உடையவனென்றுவந்த பேகவனே, நாராயணனே கோபியாதே கோபியாதேயென்று தேவர்கள் வணங்கினார்கள்-எ-று. (௨௱௯)

மாதவனேமுனியேலெமை யாளுடைவானவனேமுனியேல்.............*
மாதவனேமுனியேவிதயத்தி லிருப்பவனேமுனியே......................*
மாதவனேமுனியேல்மனி வெங்கனலானவனேமுனியே ... .............*
நீதவனேமுனியேன்முனியே லெனநின்றுபணிந்தனரோ... ............*

(எ-து) மாதவனே கோபியாதே எங்களை அடிமையாகவுடைய தேவனே கோபியாதே மாதவமாயிலிருந்தவனே கோபியாதே அடியார்கள் மனதிலிருப்பவனே கோபியாதே சோமசூரியாக்கினியானவனே கோபியாதே நீதியையுடையவனே கோபியாதே கோபியாதேயென்று நின்றுபணிந்தார்கள்-எ-று. (௨௱௰)

கங்கைமகன்கதிரோன்மகனம்பிகை காதன்மகன்றுணையர்..................*
அங்கவயின்கணிருந்தநராதிப ரடையவெழுந்தடைவே.................*
செங்கைகுவித்தசிரத்தின ராயுணர்வொன்றியசிந்தையரா...... ........*
யெங்கள்பிழைத்தலையின்று பொறுத்தருளென்றுபணிந்தனரோ.........*

(எ-து) பீஷ்மாசாரி-கர்ணன்-திருதராட்டிரன் அவன்பிள்ளைகள் அங்கேசபையிலே யிருந்தராசாக்களெல்லாம் எழுந்திருந்து சிரசின்மேல் கைகளைக்கூப்பிக்கொண்டவர்களாய் அறிவுமிருந்த மனமுடையவராய் நாங்கள்செய்த தப்பிதத்தை இன்றுபொறுத்தருள்வாயென்று வணங்கினார்கள்-என்றவாறு. (௨௱௰௧)

கண்ணபொறுத்தருள்வெண்ணெ யருந்தியகள்வபொறுத்தருள்கார்.... *
வண்ணபொறுத்தருள்வாமபொறுத்தருள்வரதபொறுத்தருணீ.........*
தின்னமனத்துணர்வொன்றுமிலாதவர்செய்தபெரும்பிழையென்.......*
றன்னனன்மலர்க்கழல்சென்னியில்வைத்தெதிரன்றுதுதித்தனரோ ... ...*

(எ-து) கண்ணனேபொறுத்தருள், ஆயர்பாடியில்வெண்ணெயுண்டகள்வனே பொறுத்தருள்மேகவண்ணனே பொறுத்தருள் வாமனேபொறுத்தருள் வரதனேபொறுத்தருள் சத்தியமாகமனதிலே அறிவான தெவ்வளவுமில்லாத சிறியவர்கள்செய்த பெரும்பிழையென்று ஸ்ரீகிருஷ்ணதேவருடைய தாமரைமலர்போன்ற பாதங்களைச் சிரசிலேவைத்துக்கொண்டு எதிரேநின்று அன்றுதுதிசெய்தார்கள்-எ-று. (௨௱௰௨)

தேவரும்வாசவனுந்திற லும்பர்கடேவனுநான்முகனும்...... ...........※
யாவருமன்பினொடாயிரநாமமு மெண்ணியிறைஞ்சுதலால்...............※
மூவருமொன்றெனநின்மருகன்றனு முனிவுதவிர்ந்தருளா... ........... ...※
மீவருமண்டமுறுந்திருமேனி யடங்கினன்மீளவுமே.....................※

(எ-து) முப்பத்துமுக்கோடி தேவர்களும் இந்திரனும் திறமையுடைய தேவதேவனாகிய பிரமதேவனும் எல்லாரும்பக்தியுடனே ஆயிரந்திருநாமமும் தியானித்து வணங்கியபடியால் திரிமூர்த்திகளு மொன்றென்று சொல்லும்படிநின்ற கிருஷ்ணதேவரும் கோபந்நீக்கிக் கிருபைசெய்து உலகமெல்லாமாகிய திருமேனி மறுபடியு மடங்கினார்-எ-று. (௨௱௰௩)

தன்னிலுயர்ந்தவர்யாருமிலாமுகில் சதுர்மறையின்படியே...............※
பெருநிலமுந்திருவடியின் மறைந்திடவிப்படிநின்றிடவும்...... ...... ...※
பின்னையுமஞ்சியயர்ந்திலனெஞ்சு பெயர்ந்திலனுகமுமே......... ... ...※
சென்னியிலுங்கரம்வைத்திலன் வன்புகழ்சிறிதுமொழிந்திலனே ... ...※

(எ-து) தனக்கு உயர்ந்தவர்கள் ஒருவருமில்லாத ஸ்ரீகிருஷ்ணதேவர் நான்குவேதத்தின்படி எந்தபூமியுந் திருவடியிலே மறைந்திட இப்படி நிற்கவும் பின்னும் அஞ்சி மனத்தில் வருந்துகிலன் தேகமசைகிலன் சிரசிலே கரங்களுங் கூப்புகிலன் வளத்தையுடைய அவர்கீர்த்தியைச் சிறிதுஞ்சொல்லுகிலன் துரியோதனன்-எ-று. (௨௱௰௪)

தொல்லவையின்கணிருந்தநராதிப துன்மதியாலெனைநீ...................※
கொல்லநினைந்ததுநன்றெனவென்றிலை கூறினனெம்பெருமா............※
னெல்லையினின்குலமுற்றுமடிந்திட வுற்றுமலைந்தொர்கணத்......... ...※
தெல்லையில்வெஞ்சமர் நூறுவன்யாவருமேறுவர்வானுலகே...... ......※

(எ-து) பழமையாயுள்ள ராஜசபையிலேயிருந்த துரியோதனராசனே துர்புத்தியினால் நீயென்னைக்கொல்ல நினைத்தது நல்லதென்றுசொல்லி கிருஷ்ணதேவர் சீக்கிரத்தில் உன்குலமுழுவதுமடிய யுத்தஞ்செய்து ஒருகணநேரத்திற் கொல்லுவேன் அப்போது எல்லாரும் மேலுலகத்திலே ஏறுவாரென்று பின்னுஞ்சொல்லுவார்-எ-று. (௨௱௰௫)

அஞ்சினமின்னையழித்திடநின்றுட னன்றுபெருஞ்சமர்வாய்...... ... ...※
வெஞ்சுடராயுதமொன்றுமெடுக்கில மென்றுவிளம்பியதும்........ ......※
மெஞ்சமலைந்தெதிர்வந்துயிர்கொள்ளுது மென்றுதனித்தனியே... ...※
பஞ்சவர்கூறியவெஞ்சினவாசக மும்பழுதாமெனவே...... ......... ...※

(எ-து) உன்னைக்கொல்லுவதற்கு அஞ்சினோம் உன்னுடனே அன்று பெரியயுத்தத்திலே வெவ்விய கிரணத்தையுடைய ஆயுதமொன்றும் எடுக்கமாட்டோமென்று சொல்லியதும் பாண்டவர்கள் தாம்வந்து சண்டையிட்டு உயிரைக்கொல்லுகிறோமென்று தனித்தனியேசொல்லி சபதமுள்ள பேச்சும் பழுதாமென்றல்லவோ-எ-று. (௨௱௰௬)

என்றுரையாடிநெடுங்கடல்வண்ண னெழுந்தருளப்பிறகே............ ...*
சென்றனரெம்முடிமன்னவரும்பணி சேர்கொடியோனையலா...... ......*
னின்றுபசாரமுரைத்தவர்தம்மை நிறுத்தியகந்தாமே......................*
வன்றிறலங்கர்பிரானொடுகூடினன் மற்றொருவாசகமே....................*

(எ-து) இப்படி சொல்லி நெடியகடல்வண்ணனான கிருஷ்ணதேவர் எழுந்தருள பின்பு எந்தஅரசர்களும் அவர்பின்னே போனார்கள் சர்ப்பக் கொடியுடைத்த துரியோதனனை யல்லாமல் நின்று உபசாரஞ்சொன்னவர்களை நிறுத்தி பின்பு வலிமையுள்ள திறமையுடைய அங்கதேசத்துக்கு அதிபதியாகிய கர்ணனுடன் ஒருவார்த்தைசொன்னார்-எ-று. (உ௱௰)

வண்மையினுயராங்கர்குலாதிப மதிகுலம்வாழ்வுறவந்........... ......*
துண்மையினுயர்மன்னவரைவரு முன்னினுமக்கிளையோர்..... .......*
பெண்மையினுயர்குந்திவயிற்றிடை பெருமையினுதயத்...........*
திண்மையினுயர்நின்னையுமன்பொடு தினகரனல்கினனே..............*

(எ-து) கொடையிலுயர்ந்த கர்ணமகாராசனே சந்திரவம்சம் வாழ வந்து உண்மையிலுயர்ந்த பாண்டவர்களைவரும் நினக்குபிறகே பிறந்த உனக்கிளையவர்கள் பெண்மையிலுயர்ந்த குந்திதேவிவயிற்றிலே பெருமையினாலும் மனவலியாலும் உயர்ந்த உன்னையும் அன்புடனே சூரியன் பெற்றான்-எ-று. (உ௱௰௧)

எயுநெடுங்கொடிமுரசுடையோனை யெழிற்றருமன்றரவே........ ... ...*
வாயுவழங்கினன்வீமனைடல்கினன் விஜயனைவாசவனும்.... .........*
வாயுளிகழ்ந்திடுவேதமருத்துவ ரன்பொடளித்தனர்செந்........ ......*
தேயுவெனுந்திறனகுலனையுஞ்சக தேவனையும்பெரிதே..................*

(எ-து) நெடியமுரசக்கொடியுடைய தருமராஜாவை அழகிய யமன் பெற்றான், வீமனை வாயுபகவான்பெற்றான், அர்ச்சுனனை தேவேந்திரன்பெற்றான், அக்கினியென்னுந் திறமையுடைய நகுலனையும் சகாதேவனையும் ஆயுள்வேதமறிந்த மருத்துவதேவர்கள் அன்புடனேபெற்றார்கள்-எ-று. ()

அந்தணன்முன்மருமந்திரமைந்தினி லறுவரையுங்கடவுட்................*
குந்திபயந்தனள்பானினியென்பல கூறுவதுங்களினீ.......... ......*
ரிந்தநிலம்பெறுவீர்தவிர்வீர் பெறவேறினியாருரியார்..................*
வந்தினியும்பியர்தம்மொடுசேர்கென மாலுமொழிந்தனனே...... ......*

(எ-து) தூர்வாசமுனிவரருளிய ஐந்துமந்திரத்திலே ஆறுபேரையும் தெய்வத்தன்மையுள்ள குந்திமாதேவிபெற்றனள் யான் பலபேசக் சொல்லவேண்டிய தென்னவிருக்கிறது உங்களுக்குள்ளே நீங்கள் இந்தப் பூமியைப்பெற்றாலும் விட்டுவிட்டாலும் உங்களைவிட பெறுதற்கு வேறே எவர் உரிமையுள்ளவர்களாவார் இனிவந்து உன்னுடைய தம்பிமாரோடு சேரென்றுசொன்னார் கிருஷ்ணதேவர்-எ-று. (உ௨௰)

வேறு

கன்றால்விளவின்கனியுதிர்த்துங் கழையாவினையின்கணமழைத்துங் *
குன்றான்மழையின்குலந்தடுத்துங் குலவுஞ்செல்வக்கோபாலா *
வின்றாலெனதுபிறப்புணர்ந்தே னென்றன்புருகியெம்பியர்பால் *
சென்றாலென்னைநீயறியச் செகத்தாரென்றுஞ்சிரியாரோ *

(எ-து) பசுவின்கன்றினால் விளவின்பழத்தை யுதிர்த்தும் மூங்கிற்குழலால் பசுக்கூட்டங்களை யழைத்து மகோவர்த்தனகிரியால் மேகஞ்சொரிந்த மழையைத்தடுத்தும் பிரகாசிக்கின்ற செல்வத்தையுடைய கோபாலகிருஷ்ணனே நீர்சொல்லுகையினாலே இன்று என்னுடைய பிறப்பையறிந்தேனென்று அன்புருகி என்தம்பியரிடத்திற் போனால் என்னை நீயறிய உலகத்தார் எப்போதுஞ் சிரிக்கமாட்டார்களோ-எ-று. (உ௨௧)

ஆரென்றறியத்தகாதவெனை யரசுமாக்கிமுடிசூட்டிச் *
சீருந்திறமுந்தனதுபெருந் திருவுமெனக்கேதெரிந்தளித்தான் *
பாரின்றறியநூற்றுவர்க்கும் பழிதீர்வென்றிப்பாண்டவர்க்கும் *
போரொன்றறிந்துஞ்செய்நன்றி யொன்றாதவரிற்போவேனோ *

(எ-து) இன்னானென்றறியத் தக்கதாகவென்னை அரசனாக்கிக் கிரீடந்தரித்துச் சிறப்பையுந் திறத்தையும் தனதுபெரியசெல்வத்தையும் எனக்கேதெரிந்துகொடுத்தான் அதுவுமல்லாமல் இன்றுபூமியெல்லாமறிய அந்தத்துரியோதனன்முதலிய நூற்றுவர்க்கும் குற்றமற்ற ஜெயத்தையுடைய பஞ்சபாண்டவர்க்கும் யுத்தம்வந்து நேரிட்டிருக்கிறதென்று அறிந்தும் ஒருவன்செய்தநன்றியைக் காப்பாற்றாதபேர்களைப்போல நான்போவேனோவென்றான் கர்னமகாராசன்-எ-று. (உ௨௨)

இரவிக்குரியதிருமதலை யிவ்வாறுரைக்கவிசைவண்டு *
விரவிப்பயிலுந்துழாய்முடியோன் வேறோர்மொழியும்விளம்பாமல் *
துரவிற்படந்தேருர்வோனை யேகென்றருளியொருசார்வாப் *
புரவித்தாவனின்றானை வருகென்றழைத்துப்புகல்கின்றான் *

(எ-து) சூரியன் புதல்வனாகிய கர்னன் இப்படிசொல்ல வண்டுகளிசை பாடுகின்றது துளபமாலையையணிந்த கிரீடத்தையுடைய கிருஷ்ணதேவர் மற்றொருசொல்லுஞ்சொல்லாமல் அவனைப்போவென்றனுப்பி ஒருபக்கத்திலேநின்ற அசுவத்தாமனை வாவென்றழைத்துச் சொல்வார்-எ-று

பேயேகானம்பலதிரிந்தும் புகன்றவிரதம்பொய்யாமல் *
வாயேவந்தபாண்டவர்கள் ளைந்தூர்வேண்டமறுத்ததற்குச் *
சேயேயனையசில்பமுனிவன் சேயேநானேச்செருக்களத்தி *
னீயேகரியென்றெடுத்துரைத்தா னெடியோன்றுளபமுடியோனே *

(எ-து) காடுகளெல்லாம் போய்த்திரிந்தும் சொன்னவிரதம் பொய்யாமல் செலுத்திவந்த பஞ்சபாண்டவர்கள் ஐந்தூராவதுகேட்க இல்லை

யென்று துரியோதனன் மறுத்ததற்கு முருகக்கடவுளையொத்த துரோணா
சாரிகுமாரனை அசுவத்தாமாவே நானையுத்தகளத்தில் நீயேசாட்சியென்
று எனக்குச்சொன்னார் கொடியவனும் தாளபமணிந்த முடியையுடையவ
னுமாகிய கிருஷ்ணதேவர்-எ-று. (௨௨௪)

ஆனவனதான்மைக்குரிக நவனிதலத்திலேவறுண்டோ...................*
நானெடுபடைபோர்களத்தி லெக்கொடியோன்பணிந்துன்னைச் ... ...*
சேனபதியாயென்றாலுந் செலுத்தேனென்றநீமறுத்தி...................*
யானுமுய்வளைவருமத் தவர்பாணிலுக்குமன்புண்டே...................*

(எ-து) நீங்காத உன்னுடைய வலுமைக்குச்சமானமாய் பூமியிலே
யொருவருமுண்டோ ஞானத்துக்கு நிபுணனை யுத்தகளத்திலே சர்ப்பக்கொடியு
டைத்த துரியோதனன் உன்னைவணங்கிச்சேனாதிபதியாயிருவென்றுசொ
ன்னாலும் நான்செலுத்தமாட்டேனென்று மறுத்தாயானால் பஞ்சபாண்ட
வர்கள் பிழைப்பார்கள் அவர்களிடத்தில் உனக்கும் விசுவாசமுண்டோவெ
ன்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௨௨௫)

ஆயோதனத்திலடலரியே யனையான்றன்னையிவ்வாறு...................*
மாயோனுரைத்துத்தன்விரலின் மணியாழியைமண்ணிடைவீழ்த்தான்.*
சேயோனதனையெடுத்தவன்றன் செங்கைகொடுக்கவாங்காமல் ... ... ...*
தூயோயூர்கோள்பரிதிதனைச் சூழ்ந்ததகல்வான்மீதென்றே... ...... ...*

[எ-து] யுத்தத்திலே பெருமைபொருந்திய ஆண்சிங்கத்தையொத்தஅ
சுவத்தாமாவை இப்படி கிருஷ்ணதேவர்சொல்லி தமதுவிரலிலிருந்த ர
த்தினம்பதித்த மோதிரத்தை பூமியிலேநழுகவிட்டார்-அசுவத்தாமா அத
னையெடுத்து அவர்கையிலே கொடுக்க வாங்காமல் பரிசுத்தமானவனே ஆ
காயத்திலே சூரியனைப் பரிவேடம் சூழ்ந்ததென்றான்-எ-று. (௨௨௬)

வரித்தாமரைக்கண்படிறுநெடுமால்வான்வாய்நோக்கவரிவிறற்கைப் ... ...*
பரித்தமாவுமாழியுடன்பரிதிவடிவந்தனைப்பார்த்தான்......... ... ... ...*
கிரித்தாழ்கவிகைக்கருங்கள்வன் கிளர்நான்முனிவன்மைந்தனையும்... ...*
பிரித்தானவனுஞ்சூளேற்றானென்றாரிருந்தபேரவையோர்... ... .........*

[எ-து] செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவ
ர் ஆகாயத்திலேபார்க்க கொடியவில்லைக் கையிலேயுடைய அசுவத்தாமாவும்
மோதிரத்துடனே சூரியன்வடிவைப்பார்த்தான் கோவர்த்தனகிரியைக் கு
டையாகப்பிடித்த கள்வனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவர் துரோணாசாரிகுமாரனா
கிய அசுவத்தாமாவையும் பிரித்தான் அவனுஞ்சபதஞ்செய்து கொடுத்தா
னென்றார்கள் பெரியசபையிலிருந்தவர்கள்-எ-று. (௨௨௭)

தனிவந்தகலுந்தாதனைப்போய்த்தானையனுகித்தடஞ்சாப... ... ......*
முனிவன்புகல்வன்மோதிரந்தொட்டருஞ்சூண்முன்னர்மொழிகின்ற ...*
னினிவந்துறவாய்நின்றாலுமெய்யென்றெளிவதிவனையெனத்...... ......*
துனிவந்தரசர்முகநோக்கிச்சொன்னானிடியேறன்னானே ... ... ..........*

[எ-து] தனியேவந்துபோகுந் தூதனிடத்தேதானே பலவந்தமாய்ப்போய் துரோணாசாரிகுமாரனாகிய அசுவத்தாமா மோதிரத்தைத்தொட்டு அரியசபதம் எதிரேசொல்லுகின்றான் ஆகையால் இனிவந்து நம்முடனே சிநேகமாய் நின்றாலும் எப்படி இவனையோக்கியனென்றறிவதென்று கோபித்து ராசாக்களுடைய முகத்தைப்பார்த்துச்சொன்னான் இடியையொத்த துரியோதனன் என்றவாறு. (௨௨௮)

துளியார்மதுவின்வலம்புரித்தார்த்துரியோதனன்றான்சொல்லியது.......*
மொளியாரவையில்வாள்வேந்தரொருவர்க்கொருவருரைத்தனவுங்......*
களியானையன்னான்செவிப்படலுங்கலங்கிச்சித்தமிவனென்னைத்..........*
தெளியாவண்ணம்பேதித்தான்றிருமாலென்றேசிந்தித்தான்..........*

(எ-து) துளிகள்நிறைந்த தேனையுடைய நந்தியாவர்த்த மாலையையணிந்த துரியோதனராஜன்சொல்லியதும் பிரகாசநிறைந்த சபையிலே வாளாயுதத்தையுடைய அரசர்கள் ஒருவர்க்கொருவர் பேசியவைகளும் களிப்பினைக்கொண்ட யானைக்குச்சமானமாகிய அசுவத்தாமா காதிலேவிழுந்தவளவில் மனங்கலங்கி இந்தச்சபையிலுள்ளவர்கள் என்னைத்தமக்கு அனுகூலனென்று தெரியாதவிதம் பேதப்படுத்தினார் கிருஷ்ணதேவரென்றாலோசித்தான்-எ-று. (௨௨௯)

தண்ணந்துளபமுடியோனுந்தனித்தங்கிருந்துதன்மனத்தி..............*
லெண்ணம்பலித்ததெனமகிழ்ந்தேயிளையோன்றனக்குவிடைநல்கி....*
விண்ணின்றமரர்மிகத்துதிக்கவிதுரன்மனையின்மேவியபின்...........*
திண்ணங்கடவுட்குலவரசன்வருமாறறிந்துசிந்தித்தான்....................*

[எ-து] குளிர்ந்த துளபமாலையையணிந்த முடியையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரும் தனிப்பட்டு அங்கேயிருந்து தன்மனதிலேநினைத்த எண்ணம்பலித்ததென்று சந்தோஷித்து அசுவத்தாமாவுக்கு செலவு கொடுத்துவிட்டு ஆகாசத்திலிருந்த தேவர்கள மிகவுந்துதிசெய்ய விதுரன் அரண்மக்குப்போனபின்பு தேவர்கட்கரசனாகிய இந்திரன்வரும்படி தெரிந்துநினைத்தார்-எ-று. (௨௩௰)

அந்தக்கணத்தில்வந்திறைஞ்சுமாகண்டலனைமுகநோக்கி.................*
கந்தத்துளபமுடியோனுக்கண்ணுங்கருத்துங்களிகூரத்...................*
தந்தத்தொழிலினரிசுமந்தவிசினிடையேயுடனிருத்தி..........*
முந்தக்கருத்தினின்றதனைமுடிப்பானுபாயமொழிகின்றான்..........*

(எ-து) அந்தட்சணத்திலேவந்து வணங்கிய இந்திரன்முகத்தைப் பார்த்து வாசனைபொருந்திய துளபமாலையையணிந்த முடியையுடையகிருஷ்ணதேவரும் கண்ணுங்கருத்தும் களிப்பையடைந்து யானைத்தந்தங்களாற்செய்த சிங்காசனத்திலே உட்காரவைத்துக்கொண்டு தன்கருத்திலே யிருந்ததை முடிக்கும்பொருட்டு உபாயஞ்சொல்லுகின்றார்-எ-று. (௨௩௧)

கிரியின்சிறகையரிபடையாய்க்கொண்டோவாண்மைக்களமீதில் ............*
வரிவெஞ்சிலைக்கைவிஜயனுக்குமாறுமுனிந்துவருகின்ற ...... ........ *
வெரியுங்கனல்வாய்விடவரவொன்றவனுக்குற்றபடையானோ ..............*
வரியின்புதல்வன்றனக்கொருபே ராம்பாகியதாரறியாதார் ...... ........ *

(எ-று) மலைகளின்சிறகையறுத்த வச்சிராயுதத்தையுடைய இந்திரனே கொண் ஆண்மையாக யுத்தகளத்தில் நீண்ட வெவ்விய வில்லையுடைய அர்ச்சுனனுக்கு மாறுகக்கொய்த்துவருகின்ற விஷநெருப்பைவீசுகின்றவாயையுடைய சர்ப்பமென்று இவனுக்குப்படையாகிய சூரியன்குமாரனுனை கர்ணனுக்கு ஒரு அம்பாகியிருப்பதை அறியாதவர்கள் யார்-எ-று. (௨௯௨)

அன்னான்விஜயன்றனைக்கொல்லிற்கடற்பார்முழுதுங்கண்ணிலா ...... *
மன்னன்புதல்வன்றனக்கேயாமொழிந்தோர்யாருமடிந்திடுவார் ...... ... *
முன்னான்குறின்மொழிந்தபடைமுடியாதிருக்கிலவர்க்கல்லை..............*
நின்னக்குறியயானறியாநினைக்கேவசையுறிலையாமே.................. ... *

[எ-று] கர்ணன் அர்ச்சுனனைக்கொன்றால் சமுத்திரஞ்சூழ்ந்த பூமிமுழுதும் திருதராட்டிரன்புத்திரனாகிய துரியோதனனுக்கேயாகும், மற்றபேர் யாவரும் இறந்துவிடுவார்கள்-அதினாலேசொன்ன படையை முடியாதிருந்தால் அவர்களுக்குக் குற்றமில்லை உன்மனமறிய நானறிய உனக்கே குற்றமில்லையாகுமென்றார் கிருஷ்ணதேவர்-எ-று. (௨௯௩)

கவசங்களைகுண்டலமென்றிரண்டுமீயிற்கற்பாந்தத்................ ...*
இவசப்படாதுங்கன்னனுயிர்செகுப்பார்மண்ணிற்சிலருண்டோ ... ...*
வவசங்கினாதருமத்துணைவரற்றக்களத்தேபடலுமத்........... ... ...*
துவசம்படைத்தோன்படுந்துயரந்துணைவாவின்றேசொன்னேனே.....*

(எ-று) கவசம் சொர்ணகுண்டலமென்றுசொல்லும் இரண்டுந் தரிப்பாரேயானால் கற்பமுடிவுநாள்வரைக்கும் தத்தஞ்செய்தாலும் கர்ணனுயிரைப்போக்குவார் பூமியிலேசிலபேருண்டோ பந்துக்களெல்லாம்அவசப்பட்டுட உடன்பிறந்தவர்களற யுத்தகளத்தில் அனுமக்கொடிபடைத்த அர்ச்சுனன்படுந்துயரத்தைத் துணைவனே இன்றேசொன்னேன்-எ-று. (௨௯௪)

வல்லார்வல்லகலைக்குருக்குமறைநாலவர்க்குங்கடவுளர்க்கு...... .........*
மில்லாதவர்க்குமுள்ளவர்க்குமிரந்தோர்தமக்குந்துறந்தவர்க்குஞ் ... ...*
சொல்லாதவர்க்குஞ்சொல்பவர்க்குஞ்சமயாதிபர்களுக்கு ... ...*
மல்லாதவர்க்குமிராவிமகனரியதானமளிக்கின்றான்.......................*

(எ-று) மாட்டாதவர்களுக்கும் கலையிலேவல்லவராகியவித்துவான்களுக்கும் வேதத்திலேவல்ல பிராமணர்களுக்கும் தேவர்களுக்கும் இல்லாதவர்களுக்கும் உள்ளவர்களுக்கும் இரந்தவர்களுக்கும் துறந்தவர்களுக்கும் சொல்லாதவர்களுக்கும் சொல்லுகிறவர்களுக்கும் சமயங்களிலே விசேஷமானவர்களுக்கும் அப்படியில்லாதவர்களுக்கும் சூரியன்புத்திரனாகிய கர்ணமகாராஜன் அரியதானங்கொடுக்கின்றான்-எ-று. (௨௯௫)

மைந்தற்குறுதி நீவேண்டில்வல்லோய்முனிவர்வடிவாகிச்............ ...※
சந்தப்பனுவலிசைமாலைத்தானகரனைவிரைந்தெய்தி...................... ...※
யந்தக்கவசகுண்டலங்களளிப்பாயென்றாலவனன்று............ ... ......※
மிந்தப்புவியின்மறுத்தறியானுயிரேயெனினுமீந்திடுவான்...... ... ......※

[எ-து] உன்புத்திரனாகிய அருச்சுனனுக்கு நீ உறுதிசெய்ய வேண்டின யாகில் வல்லமையுள்ள இந்திரனே பிராமணருடைய வடிவங்கொண்டுசந்தத்தையுடைய கவிமாலையைக்கொண்ட தானத்துக்கிடமாகிய கர்ணனிடத்திற்குச் சிக்கிரத்திற்போய் அந்தக் கவசகுண்டலங்களைத் தருவாயென்றுகேட்டால் அவன் ஒன்றாவது இந்தப்பூமியிலே யில்லையென்று சொல்லறியான் உயிரைக்கேட்டாலுங்கொடுப்பான்-எ-று. (௨௱௧)

இரண்டுமவன்பாலீகவரின்றிருந்தேரூர்ந்திப்படியரசர்........................※
திரண்டுவரினும்வெஞ்சிலைக்கைத்தாரண்டோள்விஜயனெதிர்நில்லார் ... ※
முரண்டுபொருவிற்கன்னனுந்தன்முன்னேயெய்திமுடிசிதறிப்... ... ...※
புரண்டுமடியுமெனவணங்கிப்புத்தேளரசன்போகின்றான்...... ... ......※

(எ-து) அந்தகவசகுண்டலங்களிரண்டையும் நீவாங்கிக்கொண்டாயானால் பெரியதேரிலேறிக்கொண்டு இந்தப்பூமியிலுள்ள அரசர்கள் திரண்டுவந்தாலும் வெவ்விய வில்லைக்கையிலேயுடைய விஜயபலமுள்ள அர்ச்சுனன்முன்னே நிற்கமாட்டார்கள் மாறுபட்டுப் பொருகின்ற வில்லையுடைய கர்ணனும் அவன்முன்னேவந்து தலையறுப்புண்டு மண்ணிற்புரண்டு மடிவானென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் சொல்ல அதுகேட்டு வணங்கிப்போகின்றான் தேவர்களுக்கரசனாகிய இந்திரன்-எ-று. (௨௱௨)

வேறு.

தண்டுதானெக்குனிந்துடலமரத்தாளிணைதளர்ந்துதள்ளாடக்.........※
கண்டியாவருங்கைதரக்குடையொன்றுகைதனிற்கங்கைநீர்நுரையை ...※
மொண்டுமேலுறச்சொரிந்ததாமெனநரைதிரையுடன்மூப்பொருவடிவங். ※
கொண்டதாமெனவொருமுனியாகியகொற்றவன்வாயில்சென்றடைந்தான்.

(எ-து) சிவிகையின் தண்டுபோலத் தேகம்வளைந்து சுழுப்சியடையக் கைகள்தளர்ந்துதள்ளாட எவர்களும்பார்த்து கைகொடுக்கக்கையிலே ஒருகுடையும் கங்கை நீரிலிருக்கு நுரையைமொண்டு மேலேசொரிந்த தாகுமென்றுசொல்ல நரைதிரைகளுடனே மூப்புத்தன்மையே ஒருவடிவங்கொண்டதாமென்று சொல்ல ஒருபிராமணவடிவாகிக் கர்ணன் அரண்மனைவாசலிற்போனான் தேவேந்திரன்-எ-று. (௨௱௩)

அடுத்ததானமும்பரிசிலுமிரவலர்க்கருளுடன்முற்பகலளவுங்...........※
கொடுத்துநாயகன்புகுந்தனனுளோர்குறுகுகவென்றவன்கோயிற்........※
றடுத்தல்வாயிலோர்மீளவுமுனைத்தலிற்றலைவனுந்தருகெனவினவின் [ன்
விடுத்தநான்மறைமுனியுடன்காலைவேந்தனுந்தொழுதுவீழ்ந்தா

[எ-து] அடுத்திருக்கின்ற தானமும் யாசகரும் இரப்போர்க்கு இரு கையுடனே பகிர்ந்து நாழிகையளவுங்கொடுத்து கர்ணமகாராஜன் அரண்மனைக்குப்போய் விட்டான் நாளையதினம் நீர்வாருமென்று அவன் அரண்மனையில் தடுத்த வாசற்காரர் மறுபடியுஞ்சொல்லுகையால் கர்ணமகாராசனும் அவனையழையுமென்று சொல்லச் சீக்கிரத்திலே அவருட்போய அவனைக் கண்டமாத்திரத்தில் கர்ணனும் வணங்கினான்-எ-று. (உ௩௯)

என்னமாதவம்புரிந்தனன்பரிந்துநீயின்டெழுந்தருளுதற்கென்று ... ...*
பொன்னிருசனத்திருத்திமெய்யருளுடன்பூசையுமுறைமுறைபுரிய ...*
அன்னவேதியன்றளர்ந்தவென்னடையிறை யாமமேதம்பகலென்று ... ...*
சொன்னவேலையினைத்துனக்களிப்பனீசொன்னவையாவையுமென்றான்.

(எ-து) என்னதவஞ்செய்தேன் அன்புவைத்து நீர்இங்கே எழுந்தருளுதற்கென்று பொன்னினாற்செய்த ஆசனம்போட்டு அதிலிருத்தி உண்மைபத்தியுடனே கிரமமாகப் பூசைசெய்ய அந்தப்பிராமணன் தளர்ச்சியையுடைய என்னுடைய நடையினாலே இங்கேவர இரண்டு சாமத்திற்குமேற்பட்டதென்று சொன்னபோது கர்ணமகாராசன் நகைத்து நீகேட்டபொருளெல்லாம் உனக்குக்கொடுப்பேனென்றான்-எ-று. (உ௪௰)

அருத்தியீதல்பொற்சுரர்தருவினுக்கு மற்றரிதாயளித்தியோவென்று...*
விருத்தவேதியன்மொழிந்திடநகைத்துநீ மெய்யுயிர்விழைந்திரந்தாலுங்*
கருத்தினோடுனக்களித்திலேனெனிலெதிர் கறுத்தவர்கண்ணிணைசிவப்ப*
வரித்தபோரினிற்புறந்தருநிருபர்போ யுறுபதமுறுவனென்றுரைத்தான் *

[எ-து] ஆசைப்பட்டவைகளைக் கொடுப்பதற்கு பொன்மயமாகிய தேய்வலோகத்திலிருக்கும் பஞ்சதருவுக்கும் அருமையாகும் நீகொடுப்பையாவென்று அந்த விருத்தப்பிராமணன் சொல்லச்சிரித்து நீஉடலையும் உயிரையும்விரும்பி யாசித்தாலும் உள்ளன்புடனே உனக்கு கொடாமற்போனேனேயானால் பகைவர் கண்கள் சிவக்க எதிர்த்துப் பொருகின்ற யுத்தகளத்திலே முதுகுகாட்டுகின்ற அரசர்களடையும் பதத்தை யானடைவேனென்றான் கர்ணமகாராசன்-எ-று. (உ௪௧)

வந்தவந்தணன்கவசகுண்டலங்களை வாங்கிநீவழங்கெனக்கென்னத்......*
தந்தனன்பெறுகெனவவன்வழங்க விண்டலத்துளோர்தனியசரீரி... ...*
யிந்திரன்மனைவிரகினன் மாயவனேவினன்வழங்கலேயெனவுஞ்...... ...*
சிந்தையின்கணோர்கலக்கமற்றளித்தனன் செஞ்சுடர்த்தினகரன்சிறுவன்*

(எ-து) வந்தபிராமணன் நீதரித்திருக்கின்ற கவசகுண்டலங்களை வாங்கிக்கொடுவென்று கேட்க இதோகொடுத்தேன் கொள்வாயென்று கொடுக்க ஆகாயத்திலே ஒரு அசரீரிவாக்கு கிருஷ்ணபகவான் ஒரு உபாயத்தினாலே இந்திரனை அனுப்பிவைத்தார் நீ கொடுக்கவேண்டாமென்று சொல்லவும் மனதிலே ஒருகலக்கமில்லாமற் கொடுத்தான் சூரியன் புதல்வனாகிய கர்ணமகாராசன்-எ-று. (உ௪௨)

அண்டர்யாவருமலர்மழைபொழிந்தன ரந்தரதுந்துமியார்ப்பக் [மின்றுன்
கொண்டல்வாகனன் கொண்டமெய்யொழிந்துதன் கோலமெய்யுடனெதிர்
கண்டுமாடவாருருகியேகளித்திடுங் கன்னனுக்கங்கெடுங்கடவுள்.......... *
மண்டுபோரினில்வயந்தருமிதுவென மற்றொருகொற்றவேலெடுத்தே ... *

(எ-து) அப்போது தேவர்கள் யாவரும்புஷ்பமாரி பொழிந்தார்கள் தெய்வதுந்துமி சத்திக்க மேகவாகனனான இந்திரன்தான்கொண்ட விருத்தப்பிராமணவேடம்நீங்கித் தனதுநிசரூபத்துடனே எதிரேநின்றுன் அதுகண்டு மனமுருகிச் சந்தோஷித்து கர்ணமகாராசனுக்கு அந்த இந்திரன்மிகுந்த யுத்தத்தில் இதுசெயத்தைக் கொடுக்குமென்று வெற்றியுள்ள வேலாயுதத்தை யெடுத்தென்றவாறு. (உசாக)

வெலற்கருந்திறல்விசயன்மேலொழிந்துநீ வெஞ்சினமடங்கல்போலெ
ஞ்சிற், கலக்கமொன்றறப்பொருதிறற்புனைந்திடுகடோர்க் கஜக்காலோ தக்கவு
யிரோ, யிலக்குவந்தெதிர்மலைந்தபோதிதற்கெனவே வெனமறைமையாபுமியம்
பிச், சொலற்கரும்புகழ்சுரர்பதிகொடுப்பவத் தோன்றலுந்தொழுதுகைக்
கொண்டான்.......... *

[எ-து] வெல்லுதற்கரிய திறலையுடைய அர்ச்சுனன் மேலே விடுவதை யொழித்து நீ வெவ்விய கோபத்தையுடைய சிங்கத்தைப்போல நெஞ்சிலே ஒருகலக்கமில்லாமல் போர்செய்கின்ற கடோர்க்கஜனுடைய உயிரோ இதற்குலட்சியமாகும் அவன்வந்து உன்னை யெதிர்க்கும்போது இதைவிடுவாயென்று வேதமந்திரமுஞ்சொல்லிச் சொல்லுதற்கரிய கீர்த்தியையுடைய இந்திரன்கொடுக்க அந்தகர்ணனும் வணங்கிக்கையிலே வாங்கிக்கொண்டான்-எ-று. (உசாசு)

நிரந்தரம்நிலைபெறுங்கர்ணனை நெஞ்சுறமகிழ்ந்தவணிறுத்திப்.......... *
புரந்தரன்பசுந்தண்டுழாயணிந்திடும் புயல்வண்ணனிருந்துழிப்போந்தே *
யிரந்துசென்றுதான்மொழிந்தது மவ்வளவீந்துவமாங்கவற்கிசைந்தான் *
வரந்தருந்திருமாலனைத்தினையும் வாசவன்றனக்குரைவழங்கும்.......... *

[எ-து] எப்போதும் நிலைபெற்ற புகழுடைய கர்ணமகாராஜன் செய்கையைக்கண்டு மனமகிழ்ந்து அவனை அங்கே நிறுத்திவிட்டு இந்திரனானவன் பசியகுளிர்ந்த துளபமாலையையணிந்த மேகவண்ணனான கிருஷ்ண பகவானிருந்தஇடத்திற்குப்போய்த் தான்போய்க்கேட்டதும் கர்ணன்கொடுத்ததும் அவருக்குச்சொன்னன் அப்போது வரத்தைத்தருகின்றகிருஷ்ணபகவான் அதைக்கேட்டு அந்த இந்திரனுக்குச் சொல்லுவார்-எ-று. ()

உண்மையாகவெஞ்சமர்முகத்தெதிர் பகையொன்றும்வந்துடனுறவொட்டா
திண்மையாலுயர்கவசகுண்டலங்களைச்சென்றிருந்தவற்கிவன்கொடுத்தா *
னெண்மையாயினுங்கிளைஞரேயெற்பினுமியல்பலாப்புன்செல்வரியார் ... *
வண்மையாளர்தம்மாருயிர் யாற்றலர்கேட்பினுமறுக்கிலாமன்றே ... *

(எ-து) சத்தியமாக வெவ்விய யுத்தமுகத்திலே வீரகின்ற ஆயுதங்களொன்றுந் தேகத்திலே படவொட்டாத உறுதியாயுள்ள கவசகுண்டலங்களை இரந்த இந்திரனுக்கு அந்த கர்ணன்கொடுத்தான் ஆகையால் எளிதாயிருந்தாலும் பந்துக்களே பெற்றாலும் இரக்ககுணமில்லாத அற்ப செல்வத்தையுடையவர்கள் கொடுக்கமாட்டார்கள் தியாகியானவர்கள் தம்முடைய உயிரைச் சத்துருக்கள் கேட்டாலும் இல்லையென்று மறுக்கமாட்டார்களென்று சொல்லினார்-எ-று. (உசச)

வாசவன்றனைவிடைகொடுத்ததன்பின் வந்தகாரியந்தனைமுடிப்பான் ...*
கேசவன்றனதாதைபோடுதிக்கிடுங்கேசன் மைசுர்தெரிவையைக்கிட்டுந் *
தேசவன்மருங்குறிசில்பால் விரைவினிற்செல்லெனப்பயந்தசேயிழையும்*
பாசமுந்துமமாயவனேவலாற் பாதபங்கயந்சிவப்பித்தாள்..............*

[எ-து] தேவேந்திரனுக்குச் செலவுகொடுத்து அனுப்பிவிட்டுத் தான்வந்தகாரியத்தை நிறைவேற்றும்பொருட்டுக் கிருஷ்ணனானவர் தன்தகப்பனுடன்பிறந்த உறவுமிகுந்த குந்திதேவியிடத்திற்குப்போய்ச் சூரியன் புதல்வனாகிய கர்ணனிடத்திற்குச் சீக்கிரத்தில் போவென்றார் அவளும் அன்பானதுதள்ள கிருஷ்ணபகவானுடைய ஏவுதலினாலே தன்னுடையபாதந்சிவக்கப்போனாள்-எ-று. (உசஎ)

வந்துகுந்தியின்கோயிலிலெய்தினள் வாயிலோருணர்த்திடமைந்தன் ......*
முந்துமன்புடனெதிர்கொண்டுபோய் முறைமையாலாசனத்திருந்
விந்துவின்கிரணங்கள் கண்டுளமகிழ்ந்திரங்கிவெண்கரைகடந்தேறிச்... [த
சிந்துவெண்டிரைச்சிந்துவொத்துருகிடுந்தெரிவையோடுரைபலசெப்பும்*

[எ-து] குந்திமாதேவி உன்னரண்மனையில் வந்தாளென்று காவற்காரர்சொல்ல புத்திரனாகிய கர்ணனானவன் முந்திய அன்புடனே வணங்கி எதிர்கொண்டுபோய்க் கிரமப்படி ஆசனங்கொடுத்து அதிலேயிருக்கச் சொல்ல அப்போது சந்திரகிரணங்களைக்கண்டு மனமகிழ்ந்து இரக்கமுற்றவெண்மைபொருந்திய கரையைக்கடந்து அலையைவீசுகின்ற சமுத்திரத்தைப் பொத்து மனமுருகும் அந்தத்தாயுடனே பலபேச்சுகள் பேசுவான் அந்த கர்ணமகாராசன்-எ-று. (உசஅ)

அன்னைவந்ததென்னருந்தவப்பயனென வன்பினின்புறவணங்கி.........*
பொன்னைவந்தவாறியம்பெனமற்றவளீன்றதாயானுனக்கென்று ..........*
முன்னைவந்தொருமந்திரந்தவமுனிமொழிந்ததுங்கதிரவன்முகத்தால் ...*
பின்னைவந்ததும்பேழையிலிடுத்ததும்பிழையலாதுரைத்திடக்கேட்டே.

(எ-து) தாயேநீவந்தது யான்செய்த தவத்தின் பிரயோசனமென்று அன்பினாலே இன்பம்பொருந்த வணங்கிவந்தகாரியமென்னவென்று கேட்க அவள் நான் உனக்குப்பெற்றதாயென்று, முன்னே துர்வாசமுனிவந்து ஒருமந்திரஞ்சொன்னதும் சூரியனாலே நீ பிறந்ததும் உன்னைப்பெட்டியிலிட்டதும் பிழையில்லாமற் சொல்லக்கேட்டு-எ-று. (உசகூ)

மாயனார்விரகிதுவெனமனத்திலின் மதித்துவந்தளித்திடும்வெள்ள.....*
னீயனையென்னைப்பயந்தவளென்னிலு நின்மொழிநெஞ்சுறத்தேறேன்.....*
பேயனார்சிலபேரறிவின்மையாற் பெற்றதாயெனக்கெனவந்து ... ... ...*
தூயநாகரிகத்துகிலாலவர் துன்பமுற்றென்புருவானார்.......................*

(எ-து) இதுகிருஷ்ணபகவானுடைய உபாயமென்று மனதிலே நினைத்து வேண்டியவைகளைக் கொடுக்கப்பட்ட தியாகியாகிய கர்ணமகாராஜன் நீ அந்நாளிலே என்னைப்பெற்றவளென்று சொன்னாலும் உன்பேச்சை என்மனம்பொருந்தத் தெளியமாட்டேன் பேயையொத்தபேர் நல்ல அறிவில்லாமையால் என்னைப்பெற்ற தாய்மாரென்று வந்து பரிசுத்தமாகிய நாகரீகமாயுள்ள ஒருவஸ்திரத்தால் அவர்களெல்லாந் துன்பப்பட்டு எலும்புருவானார்கள்-எ-று. (உருய)

அடாதுசெய்தவர்படாதுப்பட்டாரெனு மங்கர்கோனருண்மொழிகேட்டுத்
தடாதவன்புடைக்கெடாததூய்மொழி பகர்தையலுடையல்திறவிர்ந்து...*
படாந்தனைக்கொடுவாவெனவருதலும் பயந்திலேனெனிலென்முனியென்*
றெடாவிரித்தலைத்துடம்படப்போர்த்துயன் றீன்றதாயாமெனவிருந்தாள்

(எ-து) அடாதகாரியத்தைச்செய்து அவர்கள் படாதபாடும் பட்டார்களென்றுசொல்லும் அங்க தேசாதிபதியாகிய கர்ணமகாராசன்சொல்லைக் கேட்டு தடுக்காத அன்பையுடைய கெடாதபரிசுத்தமாகிய சொல்லைசொல்லிய குந்தியாதேவியும் மயக்கத்தினின்று நீங்கி அந்த வஸ்திரத்தைக் கொண்டுவாவென்று வாங்கி உன்னைப் பெறுதிருந்தேனேயானால் என்னைக் கோபியாதென்று அதை எடுத்துவிரித்து உதறித் தேகமுழுவதும்போர்த்தும் அன்றுபெற்றதாயென்று சொல்லவிருந்தாள்-எ-று. (உருக)

இருந்ததாயுமங்கின்றவள்போலவே யிருதடங்கொங்கைபால்சொரிந்த...*
ளருந்துபாலகன்போலவே யிளவலுமருந்தியேவிதிவழியகன்றான் ... ...*
புரிந்தவன்பொடுமருகுறத்தழுவியே பொன்முடியுச்சிமோந்தன்பால்...*
பரிந்துநானுமன்றுனைவளர்த்தெடுத்திட பாக்கியஞ்செய்திலேனென்றாள்.

(எ-து) இப்படியிருந்த தாயும் அங்கே பெற்றவள்போலே பருத்த இரண்டு கொங்கைகளிலும் பால்சொரியநின்றாள் அதைப்புசிக்கின்ற இளம்பிள்ளைபோலக் கர்னனும் புசித்து விதிவழிநீங்கினான் மிகுந்த அன்புடனே பக்கத்திலேபொருந்தத் தழுவி பொன்முடியணியும் உச்சியைமோந்து அன்புடையவளாய்ப் பரிவுசெய்து நானும் அன்றுன்னை வளர்த்தெடுக்கப் பாக்கியஞ்செய்ய வில்லையென்றாள் குந்திமாதேவி-எ-று. (உருஉ)

வருகநீமதலாயிளைஞரை வருநின்மலரடியன்பினால்வணங்கி, யொரு
மையாய்மனமொத்தேவலேபுரியவொருதனிச்செய்யகோலோச்சி, அரசெ
லாம்வந்துன் கடைத்தலைவணங்கிட வாண்மையுஞ்செல்வமும் விளங்கக்*
குருகுலாதிபர்க்குங்குரிசிலாய்வாழ்வு கூர்வதேகடனெனக்குறித்தாள். *

(எ-து) புத்திரனே நீவாக்கடவாய் உன்தம்பிமாராகிய பஞ்சபாண்டவரும் உன்னுடைய மலர்போன்ற பாதத்தைப் பத்தியுடனே வணங்கி ஒருமித்து மனமொத்து ஏவல்செய்ய ஒப்பற்ற செங்கோல் செலுத்தி ராஜாக்களெல்லாம் வந்துன் கடைவாயிற்படியில் நின்றுவணங்க ஆண்மையுஞ் செல்வமும்விளங்கக் குருகுலத்திலேயிருந்த அரசர்களுக்கெல்லாம் அரசனாகிய வாழ்வையடைவது முறைமையென்றுசொன்னாள் குந்திமாதேவியென்பவாறு. (௨௫௩)

பெற்றநீர்மகவான்பிலாமையோவன்றிப் பெரும்பழிநாணியோவிடுத்தீர்.. ※
அற்றைநாட்டொடங்கியென்னையின்றளவுமாருயிர்த்துணையெனக்கருதிக் ※
கொற்றமாமகுடம்புனைந்தரசளித்துக் கூடவுண்டரியதம்பியருந்... ...※
சுற்றமானவருமென்னடிவணங்கத் தொழும்புமேற்றமுமளித்தான்... ...※

(எ-து) என்னைப்பெற்ற நீர்பிள்ளையாசை யில்லாமையோ அல்லாமல் பெரியபழிக்கு நாணியோ விட்டுவிட்டீர் அன்றுதொடங்கியின்றளவும்என்னை உயிர்த்துணையாகநினைத்து வெற்றியுள்ள பெருமைபொருந்திய முடிசூட்டி அரசளித்துக்கூடவுண்டு தன்னுடைய அருமையாகிய தொண்ணூற்றொன்பது தம்பியாரும்பந்துக்களும் என்னுடையபாதத்தைவணங்கப் பிரகாசத்தையும் உயர்வையுங்கொடுத்தான்-எ-று. (௨௫௪)

மடந்தைபொற்றிருமேகலைமணியுகவே மாசறத்திகழுமேகாந்த...... ...※
இடந்தனிற்புரிந்துநாணயர்ந்திருக்கவெடுக்கவோகோர்க்கவோவென்றான் ※
திடம்படைத்திடுமிராசராசனுக்குஞ்செருப்புனைச்சென்றுசெஞ்சோற்றுக்
கடன்கழிப்பதுவேயெனக்கினிப்புகழுங்கருமமுமென்றான் ...※

(எ-து) குற்றமற்றுப்பிரகாசிக்கின்ற ஏகாந்தஸ்தானத்தில் அவன்பாரியினுடைய பொன்னிறைச்செய்த அழகிய மேகலைமணி யுதிரச்செய்து அவன்வருதலைக்கண்டு நான்வருத்தப்பட்டுக்கொண்டிருக்க அப்போது எனக்குத்திடஞ்சொல்லி அந்தமணிகளை யெடுக்கவோ எடுத்துக் கோர்க்கவோவென்றான் அப்படிப்பட்ட மெய்ம்மைபடைத்துள்ள அரசர்க்கரசனாகிய துரியோதனனுக்கு யுத்தமுகத்திற்போய்ச் செம்மையாகிய சோற்றுக்கடன் கழிப்பதுவே இனி எனக்கு கீர்த்தியுந் தொழிலுங் கருமமுமென்றான் கர்ணமகாராஜன்-எ-று. (௨௫௫)

பின்னையும்பற்பன்மொழிகள்பலவும்பேசிலென்பூசலோவிளைந்த ... ※
துன்னிவந்தியானின்னைநீரழைப்பதுண்மையாயுள்ளவாறுணாமி... ...※
மன்னமைந்தனுமிப்பரிசுரைப்பவின்றறத்துறந்தவன்றையிலும். ※
அன்னைநெஞ்சழிந்தேயிருகணீர்சொரியவலறிவாய்குன்றிநொந்தழுதாள் ※

(எ-து) மறுபடியும் அனேகவார்த்தைகள்பேசி இனிப்பலவார்த்தைகள் பேசியாவதென்ன யுத்தம்விளைந்திருக்கின்றது என்னை இப்போது நீர்நினைத்துவந்தழைப்பது உண்மையா உள்ளபடி சொல்லுமென்று கர்ணமகா

ராஜன் இத்தன்மையினுலே சொல்லப்பெற்று ஆற்றிலேவிட்ட அன்னையி னும் மனமழிந்து இரண்டுகண்களிலும் நீர்சொரிய அலறி வாய்குளறிமொ ந்தழுதாள் குந்திமாதேவி-எ-று. (உருசா)

ஆண்டமாமகனுமிருகணிர் துடைத்தவ்வன்னையைப்பன்முறைதேற்றி ...*
மூண்டவல்வினையின் பயனலாலியார்க்கு முயற்சியால்வருவதொன் றுண்டோ, வேண்டும்யாவையுமேதருகுவேனிருப்பேவண்டுவ வேண்டிகேளென் னைப், பாண்டிவின்றிருவாய்மொழியுமதற்குப்பண்பினுலின்னபணித்தாள்.

(எ-து) கர்ணனுகிய புத்திரனும் இரண்டுகண்களினின்றும் வருகின்றநீ ரைத்துடைத்து அந்தத்தாய்க்குப் பலதரந்தேறுதல்சொல்லி மூண்டிருக் கின்ற தீவினைப்பயனல்லாமல் யார்க்கும் முயற்சியினுலேவருகிற காரிய மொன்றுண்டோ நீர் என்னை என்னகேட்கிறீரோ அவையெல்லாந்தருவே ன் நீர்விரும்பியதைக்கேளுமென்று சொல்லப் பாண்டுமகாராஜாவினுடை ய மனைவியானகுந்திமாதேவியும் அதற்கு இனியகுணத்தோடு இதுவே ண்டுமென்றுசொன்னுள்-எ-று. (உருஎ)

பார்த்தன்வெஞ்சமரினின்னுடன்மலைந்தார்பகைப்பெரும்பாந்தளம்பகழி கோத்தலும்பிழைத்தான்மறித்துநீவிடுத்துக்கோறலென்றொருவரங்குறித் தாள், வாய்த்தமற்றவர்களினொருவன்றனை மலையலென்றொருவரங் குறி த்தாள், மூத்தவன்காதலினைநர்கம்பொருட்டான் மொழிந்தவை கேட்டி வைமொழிந்தான் ........................................................*

(எ-து) அர்ச்சுனன் வெவ்விய யுத்தத்தில் உன்னுடனேயுத்தஞ்செய்தா ல்பகையையுடைய பெரியநாகாஸ்திரத்தைக்கோத்துத் தொடுத்தவளவில் தப்பினுல் இரண்டாந்தரமும் விட்டுக்கொல்லாதேயென்று ஒருவரங்கேட் டாள், மற்றபாண்டவர்களும் தம்பிமாரென்று அவருடனே போர்செய்யா தேயென்று ஒருவரங்கேட்டாள் மூத்தவனுகிய கர்ணன் தம்பிமார்பொருட் டுத் தாய்சொன்னவைகளைக்கேட்டு இவைசொல்லுவான்-எ-று. (உருஅ)

தொருகணையொன்றுதொடுக்கவுமுனைந்துசெருச்செய்வோன் சென்னியோ டிருந்தான், மறுகணைதொடுப்பதாண்மையோவலியோமானமோமன்னவர் க்கறமோ, வுறுகணையொன்றேபார்த்தன்மேற்றொடுப்பேனுழிந்துளோரு ய்வரொன்றுரைத்தான், தறுகணல்லவர்க்குந்தறுகணனவர்க்குந் தண்ணளி நிறைந்தசெங்கண்ணன் ........................................................*

(எ-து) கொல்லப்பட்ட பாணம் ஒன்றுதொடுக்கவும், எதிரிட்டுயுத்தஞ் செய்வோன் சிரசுடனே தப்பியிருந்தால் மறுகணைதொடுப்ப தாண்மை யோ வல்லமையோ மானமோ ராசாக்களுக்குத்தருமமோ ஒருகணையோ அர்ச்சுனன்மேல்விடுவேன் மற்றபேர்பிழைப்பார்களென்றுசொன்னுன் அ வன்யாவென்றுசொன்னுல் நல்லவர்களுக்கும்பொல்லாதவர்களுக்கும் தண் ணிய கிருபைநிறைந்த கண்களையுடைய கர்ணமகாராசன்-எ-று. (உருகூ)

பெருவரமிரண்டும்பெற்றபின்றன்னைப்பெற்றதாயினைக்கரங்குவித்துத் .. *
தருவரமெனக்குமிரண்டுளவுலகிற்சராசரங்களுக்கெலாந்தாயீர் ...... *
வெருவருமமர்ப்பார்த்தனுலடியேன்வீழ்ந்தபோதவனியாரும ... ... *
மருவருமூலைப்பாலெனக்களித்துந்தம்மகனெனும்வாய்மையுமுரைப்பீர் *

(எ-து) பெரியவரமிரண்டும் பெற்றபின்பு தன்னைப்பெற்றதாயைக் கைகுவித்துவணங்கி நீரெனக்குத்தருகின்றவரங்களிரண்டிலுண்டு உலகத்திலே சராசரங்களுக்கெல்லாம் தாயானவரே அஞ்சத்தக்க யுத்தகளத்தில் அர்ச்சுனனாலே நான்வீழ்ந்தபோது இவ்வுலகத்தையாளும் ராசாக்களறிய முலைப்பாலெனக்குக்கொடுத்து நான் உம்முடையபிள்ளையென்கிற உண்மையைச்சொல்லுவீர்-எ-று. (உசுய)

உய்வருந்திறல்வெம்போர்முடிப்பளவுமுமக்குநான்மகனெனுந்தன்மை . *
யையவருமறியாவண்ணநீர்காப்பீரல்லதங்கவர்சிறிதறியில் ... ... ... ...... *
மைவருங்கடற்பாரனைத்தையுமெனக்கேவழங்குவர்வழங்கினும்யானொன் *
கைவருந்துணைவன்றனக்கலால்வழங்கேன்கடைப்பிடி கருமமீதென்றான் *

(எ-து) பிழைப்பதற்கரிய வெவ்வியயுத்தமுடிவளவுக்கும் உமக்கு நான்பிள்ளையென்கிற தன்மையைப் பஞ்சபாண்டவர்களறியாதவிதம் நீர்காத்தல்வேண்டும் அல்லாமல் அவர் சிறிதாவதறிந்தால் கருங்கடல்சூழ்ந்த பூமியெல்லாம் எனக்கேகொடுப்பார்கள் கொடுத்தால் யான் என்னுடைய துணைவனாகிய துரியோதனனுக்குக் கொடுப்பனேயல்லாமல் வேறொருவருக்குக் கொடுக்கமாட்டேன் இந்தக்காரியத்தை மறவாதேயென்றான்கர்ணமகாராஜன்-எ-று. (உசுக)

என்றலுமதுகேட்டீன்றதாயொக்குமென்றுகொண்டிவ்வரநேர்ந்து ... ... *
வன்றுயர்மேன்மேல்வளரயான்றளரா வகையுயிருனக்குமுற்பெயர்வ... *
தென்றினியெனத்தன்கண்கணீர்சொரிய வினைந்துனைந்தழுதழுதிரங்கி. *
நின்றதன்மகனைத்தழீஇயவணிறுத்தியாதவனிருந்தவழிசென்றாள் ...... *

(எ-து) அப்படிசொன்னவளவில் அதுகேட்டுப் பெற்றதாயாகிய குந்திமாதேவியுஞ் சரியென்று இந்தவரங்களிரண்டையுங் கொடுத்து வன்மைபொருந்திய துக்கமேலுமேலுமுண்டாக இனியான் தளராதவிதம் உயிருனக்குமுன்னேநீங்குமென்று தன்கண்களிலிருந்து நீர்சொரியவுருகி அழுதழுது இரக்கமுற்றுநின்ற தன்பிள்ளையைத்தழுவிக்கொண்டு அங்கேநிறுத்திவிட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் இருந்த இடத்திற் போனாளென்றவாறு.

கன்னனுங்குந்திகர்னனேடுரைத்த கருத்தெலாந்திருத்தமாக்கேட்டு ... *
எண்ணமுமுடிந்ததெனமகிழ்ந்தங்கைதவன்கையல்வில்லிடையிருந்தித் ... *
தன்னனியுடன்றபின்வருதிருபர் நம்மையுமுறைமுறைநிறுத்திப் ... ... *
பன்னமர்தடந்தேர்மீதுகொண்டன்மேபாண்டவருறைநகரடைந்தான் . *

(எ-து) ஸ்ரீகிருஷ்ணதேவரும் ருக்குமாதேவியானவள் கர்ணனிடஞ்சொல்லிய வருத்தத்தையெல்லாந் திருத்தமாக்கேட்டு நம்முடைய எண்ணமெல்லாம் நிறைவேறியதென்று மனமகிழ்ந்து அவளை அங்கவிட்டேவ நிறுத்திவிட்டு குளிர்ந்த தயையுடன் தன்னைவந்த அரசர்களையும் அங்கங்கேநிறுத்திவிட்டு உறுப்பமைந்த விசாலம்பொருந்திய தேரின்மேலேறிக்கொண்டு அப்பொழுதே பாண்டவர்களிருக்கின்ற நகரத்தை யடைந்தார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௨௯௩)

தூதுபோயரவத்துவச்சனோடுறுதிசொன்னதுமறுத்தவன்சினந்து ... ...*
மோதுபோர்புரியத்துணிந்ததும்விதுரன்முறிவில்லிறுத்ததுங்கங்குல் . *
போதுபோர்வஞ்சம்விளைத்ததுங்கன்னன்புரந்தரற்கீந்ததும்பயந்த...[ன்,
மாதுபோய்வரங்கள்பெற்றவையொழியமற்றெலாமைத்துனர்க்குரைத்தா

(எ-து) தூதுபோய் சர்ப்பக்கொடிபடைத்த துரியோதனனுக்கு உறுதி சொன்னதும் அதை அவன்மறுத்துக் கோபித்து மோதப்பட்ட யுத்தத்துக்கு சம்மதித்துத்துணிந்ததும், விதுரனவன்வலிமையுள்ள தன்வில்லையொடித்ததும், இராத்திரியில் நிலவறைவெட்டி தனக்கு வஞ்சனைசெய்ததும், கர்னன் கவசகுண்டலங்களைத் தேவேந்திரனுக்குக் கொடுத்ததும், பெற்ற குந்திமாதேவி கர்னனிடத்திற்குப்போய் பெற்ற வரங்கள் தவிர மற்றவைகளெல்லாம் மைத்துனராகிய பஞ்சபாண்டவர்களுக்குச் சொல்லினார் ஸ்ரீகிருஷ்ணசுவாமி-எ-று. (௨௯௪)



[வாழி விருத்தம்.]

பஞ்சவர்தூதனென்னும் பக்தவச்சலனும்வாழி...............*
கஞ்சமென்முகத்தாளான கற்புத்ரௌபதியும்வாழி...........*
வஞ்சமில்மனத்தோரான மன்னரைவர்களும்வாழி............*
செஞ்சொலாலிதைப்படித்தோர்ஜெகத்தோரும்வாழிமாதோ *

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிதூது-முற்றிற்று

